"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத.—Speak the Truth.

'Hitch your Wagon to a Star." "To Thine own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903-ம் ௵ அக்டோபர் ௴ [இலக்கம் 6.

"THROUGH NATURE TO GOD".

A RAY OF LIGHT.

## கதிரொளி.

**கதிரவன்** என்பது சூரியனுக்குரிய பேர்களில் ஒன்று. கதிர் கதிராகக் கிரணங்களை உதிர்க்கிறதனால் அவனுக்குக் கதிரவன் என்று பேர்வந்தது. சூரிய கிரணங்களில் ஒன்றுக்கு கதிரொளி யென்றுபேர்: அதாவது ஒளித்திரள் அல்லது ஒளிக்கூட்டம்; ஒருமைப் பெயராம் கிரணத்திற்கு கூட்டப்பெயராம் **கதிர்** என்பது என்னமாகப் பொருந்துமென்று கேட்கலாம். உண்மையில் ஒரு கிரணத்தை யெடுத்துப் பார்த்து ஆராய்ந்தால் முகக்கண்ணுக்கு வெண்மையாகப்படும் ஒளி உண்மையில் எழு வர்ணங்கள் ஒன்று சேர்ந்தனவாகவிருப்பது விளங்கும். இதைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்க வேண்டின் ஒரு இருட்டறையின் கூரையில் சிறு துவாரம் செய்து சூரியகிரணம் ஒன்றை உள்ளே நுழையவிட்டு அது தரையில் விழுமுன் திரிகோண வடிவமான ஸ்படிகமொன்றை ஒரு கோணம் கீழ்நோக்கப் பிடித்து அந்த சூரியகிரணம் அந்த ஸ்படிகத்தின் மேற்புறத்தில் விழும்படிச்செய்தால் ஒரு அதிசயம் காணலாம். உள்ளே நுழைந்து தரையை நோக்கிச் சென்ற கதிரொளி ஸ்படிகத்தின்மேல் விழவும் அது முன்போல் நேரச்செல்லாது குறுக்குப்பட்டுத் திரும்பிக் கோணாகாரமாய்ப் பக்கத்திலுள்ள சுவற்றின்மேல் எழுவர்ணக் கலைகளாக விரிந்து விளங்கும். இந்த ஸ்படிகத்துக்கு இங்கிலீஷில் (prism) என்று பேர். எழு வருணங்களாகப் பிரிபட்டு விளங்கும் ஒரு கிரணத்தின் கலைகளுக்கு இங்கிலீஷில் "Spectrum"

என்றுபேர். இந்த ஏழு வர்ணங்களும் கீழிருந்து பின்வரும் வரிசைக் கிரமம் தவறாது துலங்கும். அதாவது:— (Red) சிவப்பு, (Orange) கிச்சிலிப் பச்சை யல்லது மரகதம், (Yellow) மஞ்சள், (Green) பச்சை, (Blue) நீலம், (Indigo) அவுரி நீலம் அல்லது கருநீலம், (Violet) ஊதா. இந்த ஏழு வர்ணங்களும் இவ்வரிசைக் கிரமம் தப்பாது ஒழுங்காகத் தோன்றும். ஒன்றாகத்தோன்றிய வெண்மைநிறமான கதிரொளியை திரிகோண ஸ்படிகத்தின் வழியாகச் செல்லவிட்டதால் அது தன்னுளடங்கிய ஸப்தவர்ணமான ஏழு கலைகளையும் விரித்துக் காட்டும்படியான அதிசயத்தைக் கண்டோம். இப்பொழுது இந்த ஏழுவர்ணக் கலைகளையும் ஒன்றாக அறிவது எப்படி? ஏனெனில் அத்வைத சாஸ்திரப்படி எல்லாம் ஒன்றேயாதலால், ஒன்றைப் பலவாகவறிந்த நாம், அனேகமாம் பலவற்றை அதிலும் சூக்ஷ்மமான ஏகவஸ்துவாகக் காணல்வேண்டும். இல்லாவிட்டால் நாம் வழியில் தடைபட்டு நின்று சாஸ்திரப்படி அத்வைத நிலைபெறுவது கூடாமை யென்று நினைக்கவரும். இந்த ஏழையும் ஒன்றாகக் கூட்டினால் வெள்ளை நிறமாம் கதிரொளியாகும். அது எப்படியென்றால் சுவற்றில் இந்த ஏழுவர்ணக்கலைகளும் எங்கே விழுகின்றனவோ அங்கே தனித்தனி ஒரு சிறு கண்ணாடியை வைத்து இந்தவர்ணக்கலைகளெல்லாம் கூரையில் ஒரேயிடத்தில் விழும்படிச் செய்தால் ஏழும் ஒன்றாகி வெண்மைநிறமான ஒளியாகத்தோன்றும். ஆனால் நாம் ஏகபாவம் அடைய ஏழையும் ஒன்றாகப் பரிக்கும் விதி யிதல்ல. இப்படிப் பார்த்தால் செக்கில் கட்டின மாடுபோல் சுற்றிச் சுற்றி ஒரேவழியில் வளைய வந்து கொண்டிருக்கவேண்டும். இதனால் அத்வைத பாவம் கிட்டாது. ஆனால் உண்மை வழிப்பட்டு உளக்கண்ணால் பார்த்தால் நமக்கணுக்கு சிவப்பாகவும், மரகதமாகவும், மஞ்சள், பச்சை முதலான நிறங்களாகவும் புலப்படுவதெல்லாம் உண்மையில் நிறமற்ற பூதாகாசத்தின் அலைகளாம். அசைவுகளின் உணர்ச்சியே யன்றி வேறொன்றல்லவென்று விளங்கும். இதை ஆங்கிலேய பௌதிக சாஸ்திர விற்பன்னர் "Spectroscope" என்னும் ஒரு அற்புத யந்திரத்தாலும் (Telescope) என்னும் யந்திரத்தின் உதவியாலும் பகிர்முகமாகப் பார்த்தாராய்ந்து தெளிந்திருக்கிறார்கள். இப்படி ஆராய்ந்து தெளிந்ததின் பயனாக, இந்த ஏழுவர்ண வெளிச்சங்களும், உண்மையில் (ether) என்னும் சூக்ஷ்மாகாசத்தில் அதிவேகமாயுண்டாகும் அலைபொத்த அசைவுகளின் புலனுணர்ச்சியே யன்றி வேறல்லவென்று கண்டுணர்ந்திருக்கிறார்கள். உதாரணமாக சிவப்பு நிற ஒளி குறித்த அளவுள்ள அலைகள் ஒரு (Second) விநாடியில் 3950 கோடி விகிதம் அசைவதனால் உண்டாகிறதென்றும், ஊதா ஒளி இதைப்போல இரண்டு பங்கு அதிகமாக ஒரு விநாடியில் அசைவதால் புலப்படுகிறதென்றும், அதிசூக்ஷ்மயந்திரங்களாலும் கணிதசாஸ்திர உதவியாலும் கணக்கிட்டுக்கண்டிருக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு நிறத்துக்கும் கண்டு பிடித்திருக்கிறார்கள். இதனால் நாம் அறிய வேண்டிய தென்னவென்றால், கதிரொளியாகவும், அதன் ஸப்தநிறக்கலைகளாகவும் தோற்றும் ஒளியாம்புலனுணர்ச்சி சூக்ஷ்மாகாசத்தில் ஒரு அளவு தொட்டுஒரு அளவு வரையில் உண்டாகும் அலைகளின் வேகத்துக்குத் தக்கபடி வித்தியாசமாகத் தோற்றுகிறதன்றி, ஊன்றிப்பார்க்கப்போனால் எல்லாம் சூக்ஷ்மாகாசத்தில் அலைரூபமாக வுண்டாகும் (Vibrations) அசைவுகளேயன்றி வேறல்ல வென்பது விளங்கும். எல்லாமே சூக்ஷ்மாகாசத்திலுண்டாகும் அசைவுகளிலிருந்துண்டாம் பொழுது, தோற்றும் வித்தியாசங்கள் அலைகளினுடையவும், அசைவுகளினுடையவும் நீளம், வேகம் இவற்றின் வித்தியாசத்தினால் தோற்றுவதேயன்றி வேறு உண்மையில் வித்தி

யாசமில்லையென்று ஊகித்துப் பார்க்க உண்மையாகப்படும். இப்பொழுது ஒன்றாய்த் தோற்றிய கதிரொளியை, ஸப்த கலைகளாகப் பிரித்து, அந்த ஸப்தகலைகளின் தோற்றங்களாகிய ஏழு வர்ணங்களும் சூக்ஷ்மாகாசத்திலுண்டாகும் (Vibrations) அசைவுகளின் வெவ்வேறு கதிக்கேற்ற தோற்றமேயன்றி உண்மையில் வித்தியாசமில்லையென்று கண்டோம். இப்படியாக ஒன்றையேழாகப்பிரித்து, ஏழையும் ஒன்றாக அறிந்தோம். இப்படியே எதையும் புத்தி நுட்பத்தோடும் சூக்ஷ்ம அறிவோடும் ஆராய்ந்து பார்ப்போமானால், இந்தப் பிரபஞ்சத் தோற்றங்களெல்லாம் சூக்ஷ்மாகாசத்தில் அலைகளாகத் தோன்றும் அசைவுகளின் கதிவித்தியாசமேயன்றி வேறு உண்மையான வித்தியாசமில்லை யென்று விளங்கும். இப்படி யெல்லாவற்றையும் பிரித்துப் பார்த்து ஆராய்ந்து பகுத்துணர்ந்து உண்மையை யுள்ளபடி பற்றிச் சென்றால், எல்லாம் **ஆகாசம், அசைவு, ஆட்டுவோன்** என்று இந்த மூன்றில் வந்துமுடியும். ஆகாசத்தைப் பகுத்துப் பகுத்துத் தொகுத்துக்கொண்டுபோனால் அது ஸ்தூலாகாசம், சூக்ஷ்மாகாசம், என்று ஒன்றுவொன்றாக வொடுங்கிக் கடைசியில் **சிதாகாசத்தில்** போய் முடியும்.

அலைகளெல்லாம், அசைவாகமாறி, அந்த அசைவும் சக்தியிலொடுங்கி, இந்த சக்தி ஸ்தூலசக்தி, சூக்ஷ்மசக்தி, மூலசக்தி யென்று ஒன்றுவொன்றாக வொடுங்கிக் கடைசியில் **சித்சக்தியில்** போய் முடியும். ஆட்டுவோன் எப்போதும் அசைவற்று நிற்கும் ஆதிகாரணமாம் **முதற்பொருளாக** விளங்குவன். அவன் அசைவற்றிருப்பினும் “**அவனன்றியோரணுவு மசையாது**” என்று மூத்தோர் சொல்லியபடி **அவன்** அசையாவிட்டால் எல்லாம் அசைவற்றுப்போம். எல்லாவற்றிற்கும் ஆதிகாரணன் **அவனே** யாவன். இப்படி எதையும் ஒன்றாக்கிக் கொண்டு அத்வைதமலை யேறி அதன் உச்சியில் வந்தால் **சிதாகாசம், சித்சக்தி,** சத்தாகவிருக்கும் **அவன்** என்கிற இந்த மூன்றில் வந்து சேருவோம். இந்த நிலையடைந்து பார்த்தால் இம்மூன்றும் ஒன்றேயெனக் கரதலாமலகம்போல் ஞானதிர்ஷ்டிக்குத் தானே புலப்படும். இதை விளக்கவே ஏகமாயுள்ள அத்வைத வஸ்துவை சச்சிதானந்தம் என்று சொல்லி சத், சித், ஆனந்தம் என்கிற மூன்றும் சேர்ந்து ஒன்றாயிருப்பதாகச் சுருதிகள் முறையிடுகின்றன. இப்படியாக கதிரொளியைப்பற்றிச் சூரியகிரணங்களின் வழியே ஆராய்ந்துசென்றால் அத்வைத வஸ்து விளங்கும் மேருமலையுச்சியில் அது நம்மைக் கொண்டு போய் விடுகிறதைக் காணலாம். ஆகையால் திருமூலர் திருமந்திரத்தில் “**தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு**” என்று சொல்லியதினுண்மை கதிரொளி புதாரணத்திலும் உள்ளபடி விளங்குவதைக் கண்டு கிரகித்து **உண்மை கடைப்பிடித்து** உய்வோமாக.

*ஓம் தத் ஸத்.*

ஸத்யானந்த:

# X RAYS; OR, RONTGEN RAYS.

## "உள்ளொளி."

"உள்ளொளி" என்பது அகத்தொளியாம் ஆன்மப்பிரகாசத்தினுள் விளங்கும் பரஞ்சோதியாம் கடவுளுக்குப்பேர். ஆனால் இங்கே அந்த அர்த்தத்தில் உபயோகிக்கவில்லை. அகத்தொளியாம் ஆன்மப்பிரகாசத்துக்கே "ஜோதியுள் ஜோதியுள் ஜோதி" யென்றுபேர். இந்த ஜோதியையே "பாரொடு விண்ணாய்ப் பரந்ததோர் ஜோதி" யென்று வருணித்திருக்கிறார்கள். கதிரொளியைப் பிரித்தபொழுது அதன் எழுகலைகள் ஏழுவர்ணங்களாக விளங்கினதைக்குறித்துச் சொல்லுங்கால், இவையெல்லாம் சூக்ஷ்மாகாசத்திலுண்டாகும் அலைகளின் அசைவினாலுண்டாவதேயன்றி வேறல்லவென்று சொன்னோம். இதில் நம்கண்ணுக்குப்புலப்பட்ட இந்த ஏழுவர்ணமான கலைகள்போக இன்னுமெத்தனையோ வகையான ஒளிகளிருக்கின்றன. அவை நம் கண்ணுக்குப் புலப்படுவதில்லையால் அவைகளைப்பற்றி அறியவகையின்றி யிருக்கிறோம். அவை இயற்கையில் நம் கண்ணுக்குப் புலப்படா; அவ்வளவு சூக்ஷ்மமாகவிருப்பினும் சிலசந்தர்ப்பங்களில் புலப்படத்தக்கவையாயிருக்கின்றன. பூதாகாசத்தில் கண்ணுக்குப்புலப்படாத ஒளியலைகள், சூக்ஷ்மாகாசத்தில் புலப்படுவனவாயிருக்கும். இதைப் பகிர்முகமாகப் பரீக்ஷித்துப்பார்க்க வேண்டில் 12 அங்குல நீளமும் இரண்டங்குல குறுக்களவுமுள்ள ஒரு கண்ணாடிக் குழாயின் இருபக்கத்தையுமடைத்து அதிலுள்ள வாயுவை அனேகமாக எல்லாம்போக வெளியாக்கிவிட்டால் மிகவும் சிறுபான்மையானவாயு அதனுள்ளிருக்கும். இதனுள் ஒரு பக்கத்திலிருந்து ஒருமெல்லிய கம்பியும் மற்றொருபக்கத்திலிருந்து மற்றொரு கம்பியும் குழாய்க்குள் செல்லும்படியாகவும், ஆனால் வாயுவுள்ளே புகாதபடி கண்ணாடியோடு சேர்த்து அமைத்துமிருக்கும். இக்கண்ணாடிக் குழாயினுள்ளேயுள்ள வாயுவை வெளிப்போக்கியபின் ஒரு பக்கத்திலுள்ள கம்பியின் வழியாக மின்சாரத்தை யேற்றினால் அது குழாயுட்புகுந்து மற்றொருபக்கத்திலிருக்கும் கம்பியில்பாய்ந்து அதன்வழியே வெளியேபோகும். மின்சாரம் ஏற்றினகம்பிக்கு (Anode) ஆண்கம்பியென்றும், மின்சாரத்தைவாங்கி வெளியேவிடும் கம்பிக்கு (Kathode) பெண்கம்பியென்றும் பேர். இந்த ஆண்கம்பியிலிருந்து மின்சாரம் பெண்கம்பியில் பாயும்பொழுது கண்ணாடிக் குழாய்க்குள்ளே யிருக்கும் ஆகாசத்தில் உண்டாகும் ஒளி யலைகளினால், அக்கண்ணாடிக்குழாய் பொன்மயமான பச்சைநிறவொளியிலங்கக் காணலாம். இந்தப் பொன்னிறமான மரகதவொளி பெண்கம்பியின் நுனியிலிருந்துண்டாகும் ஒளிப்பிரகாசமாயிருப்பதைக்கண்டு, இதைக்கண்டுபிடித்த ஸர் உவில்லியம் க்ரூக்ஸ் என்னும் பௌதிகசாஸ்திர விற்பன்னர் இந்த ஒளியை "காதோட் ரேஸ்" (Kathode Rays)—அதாவது "பெண்தந்தியொளி" அல்லது தமிழில் அதற்கு சரியான ஒருபேரளிக்க சக்தியொளி யென்று சொல்லத்தக்க பேர் கொடுத்தார். இந்த ஒளியைக்கண்டுபிடித்து 25 வருஷங்களாயின. 1895-ம் வருஷத்தில் ரான்ட்ஜென் என்னும் ஜெர்மானிய சாஸ்திரபண்டிதர் ஒருவர், இந்த ஒளியைப் பரீக்ஷித்துப்பார்த்து வருகையில் இதிலிருந்து இன்னொரு ஒளியுண்டாகக்கண்டார். இந்த "காதோட் ரேஸ்" என்னும் "பெண்தந்தியொளி" கண்ணாடிக்குழாய்க்கு வெளியில் அதை யூடுருவிச்செல்லச் சக்தியற்றதாயிருந்தது.

இந்தக்கண்ணாடிக்குழாயைச்சுற்றி காகித அட்டையினாலான ஒரு மூடிபோட்டு, வெளி வெளிச்சம் அக்கண்ணாடியில் படாதபடி மூடினால் அந்தக் காகித அட்டை வழியாக ஒருவகை யொளி வெளியாவதைக் கண்டார். இந்த ஒளி சிலவஸ்துக்களின் மேற்பட்டபொழுது அவை பிரகாசித்து விளங்கவும் கண்டார். இப்படி இந்த ஒளியினால் பிரகாசிக்கும் வஸ்துக்களில் "platino-cyanide of barium" என்னும் ரஸாயனப்பொருள் ஒன்று. இன்னொரு ரஸாயனப்பொருளும் இவ்வொளியை விளங்கவைக்கிறது. அதன்பேர் முழ நீளமிருப்பதோடு இங்கிலீஷிலும் அதை உச்சரிப்பது கஷ்டமாயிருக்கிறது. அது மெழுகுபோலுள்ள ஒருவஸ்துவாம். அதன்பேரை இங்கிலீஷில் வரைந்துள்ளபடி வரைகிறோம். உச்சரிப்புமட்டும் கஷ்டந்தான். அதன்பேர் என்னவென்றால், pentadecylparatolylketone. பஞ்சதுவி தசாகூராமுள்ள இந்த ரஸாயனவஸ்துவாவது, platino—cyanide என்னும் மற்றொருவஸ்துவாவது பூசிய ஒருகடிதாசியில் இந்த ஒளி விழுந்தால் அது மிகுந்த பிரகாசத்தோடு இலங்குகிறதைக் காணலாம். இந்த கடிதாசியட்டையால் மறைக்கப்பட்ட கண்ணாடிக்குழாய்க்கும், அதிலிருந்துவெளியாகும் இந்த நூதன ஒளி விழும் கடிதாசிக்கும் இடையே ஒரு வெறுங்கடிதத்தைப்பிடித்தால், அதனால் அந்த ஒளி தடுக்கப்படாமல் முன்போலவே ஒளிவிளங்கக் காணலாம். சிறிது மங்கியிருக்கும்: ஆனால் நிழல்படுவதில்லை. ஒரு புத்தகத்தைப் பிடித்தாலும் அப்படியே, ஒரு மரத்துண்டைப் பிடித்தாலும் அப்படியே—நிழல் வெகுலேசாகத் தெரிகிறது. இதனால் இந்த அற்புத ஒளி, மரத்தையும் புத்தகத்தையும் ஊடுருவிச்செல்லும் சக்தியுள்ளதென்று தெரிகிறது. புஸ்தகத்துக்குள் ஒரு இரும்புத்துண்டையாவது வெள்ளி செம்பு நாணயத்தையாவது வைத்துப்பிடித்தால் புஸ்தகத்துக்குள்ளேயிருக்கும் இரும்புத்துண்டு, அல்லது நாணயத்துண்டு நிழல்காட்டித்தெரிகிறது. இந்த வெளிச்சத்தில் கையைப் பிடித்தால் தசைநரம்புகளெல்லாம் லேசான சாயல் காட்ட, உள்ளேயிருக்கும் எலும்பின் நிழல் நன்றாகத் தெரிகிறது. ஒரு குழந்தை ஒரு காசை விழுங்கி விட்டதானால் அதைவைத்து இந்த ஒளியினால் பரிசோதித்தால் உள்ளே விழுங்கியகாசு தங்கியிருக்குமிடம் நிழலில் நன்றாகத் தெரியும். இந்த ஒளியைக்கொண்டு படம் பிடிக்கும் சூக்ஷ்மமும் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஒரு மரப்பெட்டியில் நகை நட்டுகளை வைத்து இந்த ஒளியினால் பரிசோதித்தால், உள்ளேயிருக்கும் நகை நட்டுகள் படம்பிடித்தாற்போல் நன்றாகத் துலங்கக் காட்டும். இந்த அற்புதமான ஒளியைக் கண்டுபிடித்த ரான்ட்ஜன் என்னும் சாஸ்திர பண்டிதர், இதற்கு "X Rays' என்று பேரிட்டார். இதை யறிந்த சாஸ்திர விற்பன்னர்கள், இதைக் கண்டு பிடித்தவர் கீர்த்தி விளங்க, இதை அவர் பேரால் 'ரான்ட்ஜன் ரோஸ்" என்று வழங்கி வருகிறார்கள். இப்படி இன்னும் எத்தனையோ ஒளிகளிருக்கின்றன. இந்த அதிசயத்திலும் அதிசயமென்ன வெனில் இந்த ஒளிகளெல்லாம் அண்டத்தில் பகிர்முகமாக விளங்குவதுபோல், பிண்டத்தில் அகமுகமாக விளங்குகின்றன. இதை யோக முறைப்படி யனுஷ்டித்துப் பார்த்தால் விளங்கும். இதை குருமுகமாக விருந்துகேட்டுப் பழகவேண்டுமேயன்றி "ஏட்டின் புறத்தில் எழுதிவைப்பதனால்" பயனில்லை.

இப்படி எண்ணிறந்திலங்கும் எவ்வகைப்பிரகாசங்களுக்கும் பிரகாசமளிக்கும் பரஞ்சோதி கடவுள் ஒருவரே. இந்த கடவுட்பிரகாசம் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்கின்ற நான்கிடத்திலுள்ளது. இந்த நாலிடம் அண்டத்திலுள்ளதுபோல் பிண்டத்திலுமுண்டு. இவைகளையறிந்து பாவனானுஷ்டான விதிப்படி நிஷ்டை கூடியிருந்து படிப்படியாக நிலையேறி

ஆன்மதரிசனம் பெற்றுப் பிறகு கடவுள் தரிசனமும் பெறுவர் மஹாயோகிகள். மானுடதேகமாம் பிண்டத்தில் கடவுளின் பிரகாசம் விளங்கும் நான்கு இடங்களாவன:—(1) பிண்டத்தில் அகம் **ஆன்மா**. ஒரு பொருளின் உண்மையை அறிதல் **ஆன்ம அறிவு**—இது பிரக்ஞை எனவும்படும் (2) பிண்டத்தில் அகப்புறம்—**ஜீவன்**. ஒரு வஸ்துவின் பிரயோசனத்தை யறிந்த அறிவே **ஜீவ அறிவு**—இது கிஞ்சிக்ஞத்துவம் எனவும் படும். (3) பிண்டத்தில் புறம்—கரணம் அல்லது மனசு. ஒருவஸ்துவின் நாம ரூபத்தையும், குணகுற்றங்களையும் விசாரித்தறிதல், கரணமாகிய **மனஅறிவு** (4) பிண்டத்தில் புறப்புறம் கண் முதலிய இந்திரியங்கள். ஓருபொருளினது நாம ரூபகுணகுற்றங்களை விசாரியாமல் அந்தப் பொருளைக் காணுதல் இந்திரிய காக்ஷி, இந்திரிய அறிவு, புலனறிவு. இதுபோலவே கரணக்காக்ஷி, ஜீவக்காக்ஷி, ஆன்மக் காக்ஷியுமுண்டு. இது போலவே,

(1) அண்டத்தில் அகம்—அக்னி. (3) அண்டத்தில் புறம்—சந்திரன்.

(2) அண்டத்தில் அகப்புறம்—சூரியன். (4) அண்டத்தில் புறப்புறம்—நக்ஷத்திரங்கள்

இப்படி அண்டத்தில் நாலிடம், பிண்டத்தில் நாலிடம், ஆக எட்டிடங்களிலும் கடவுள் பிரகாசம் காரியத்தாலுள்ளது. அதாவது பயனைக்கொண்டு அறிந்து கொள்ளத்தக்கதாய் விளங்கும். நிழலைக்கொண்டு பிரகாசம் இருப்பதை யுணர்வதுபோல உணரத்தக்கதாய் விளங்கும்.

காரணமாயுள்ள இடம், { பிண்டத்தில்—**புருவமத்தி**,<br>அண்டத்தில்—**பரமாகாசம்**.

காரியகாரணமாயுள்ள விடம்,—ஸர்வஜீவன்களிடத்தும், விந்துவின் விளக்கமாகிய மின்னலிடத்தும், நாதத்தின் விளக்கமாகிய இடியினிடத்தும், "பாரொடு விண்ணாய்ப் பரந்ததோர் ஜோதி" யென்றும் "ஜோதியுள் ஜோதியுள் ஜோதி" யென்றும் சொல்லியபடி எல்லாவஸ்துக்களிடத்தும் அந்தர்யாமியாய் விளங்கும். மேற்குறித்த **அகமாகிய** (உள்ளம்) ஆன்மப் பிரகாசமே "**ஞானசபை**" யென்றும் **சிற்சபை** யென்றும் சொல்லப்படுவது. அந்த ஞான சபையாம் பிரகாசத்துக்குள்ளிருக்கும் பிரகாசம் **கடவுள்**. அந்த **உள்ளொளியின் அசைவு** "**நடனம்**." இதுதான் ஞானாகாச நடனமென்றும், அசைவுற்றதே **நடராஜ**னென்றும், ஆனந்த நடனமென்றும் சொல்லுகின்றது"—என்று விளக்கி யிருக்கிறார் அருட்பிரகாசவள்ளலாராக விளங்கிய சிதம்பரம் ஸ்ரீ இராமலிங்கஸ்வாமிகள். இப்படியாக எதைத்தொட்டுப்பரிசோதித்தாலும் உள்ளபடிபார்த்தால் கடவுளின் மகிமையே விளங்கும். இதையுள்ளபடி யறிந்துய்வதே இந்த மானிட ஜன்மமெடுத்ததற்குப் பயனும். இதையறிந்தவரே பூரணமெய்தியவராம். மற்றவர்களெல்லாம் குறைமக்களாய்ப் பிறந்திறந்து பின்னும் பின்னும் இந்த பவசாகரத்திலுழன்று படிப்படியாகமேலேறிப் பூரணமெய்துவர். பூரணமெய்துவதே மோக்ஷசாம்பிராஜ்யமாம். "கடவுளு நானுமொன்றானேன்" என்று உள்ளத்துணர்ந்தனுபவிக்கும் அனுபவமே ஸ்வானுபவமாம். எல்லாச்செல்வங்களிலும் இந்த ஸ்வானுபூதிச்செல்வமே என்றுங் குறையா நிறை செல்வமாம் இச்செல்வம் பெற்றாரே உண்மைச்செல்வம் பெற்றவர்கள். மற்றவர்களெல்லாம் உருவெளித்

தோற்றத்தைக் கண்டு தன் காதலனென்று கட்டியணைக்கச்செல்லும் காமநோய் பிடித்த கன்னியரைப்போல் இவ்வுலகில் சொல்லொணா விரகதாபத்தால் வருந்தியுழலுவர்: அவர்களை வெண்ணிலாச் சுட்டெரிக்கும், குளிர்சந்தனம் கொப்பளிக்கச்செய்யும். இன்னும் இதுபோன்ற மாயாலீலையி லீடுபட்டு மருள் நீங்காதுழலுவர். ஆகையால் உண்மையாம் "உள்ளொளி" தவிரமற்ற எல்லா ஒளியும் மயக்கந்தருவதாகவே யிருக்கும். இந்த உண்மையுணர்ந்துய்வாரே மேலோராவர்.

"அன்னையே குருவே அருளொளிக்கண்ணே!
உன்னையே நம்பியானுள்ளொளி கண்டேன்
என்னையே கருவாய்க்கண்ணுளே வைத்து
முன்னையே யருவாய்ப் பெற்றாய் போற்றி!"

"அருளெனப்படுவது மருளற்றசிந்தை
மருளே யிருளில் மயக்கமச்சமுமாம்
மயக்கந்தானறும் மாசற்றசிந்தையில்
சிந்தைதெளியத் தெளியச் சிவமதுவாமே."

"சிந்தைய தென்னச் சித்தென்ன வேறில்லை
சிந்தை தெளிந்திடச் சித்ததுவாமே
சித்தது வாவது முள்ளொளி தானே
உள்ளொளி விளங்கிடும் சித்சபையாமே."

ஓம் தத் ஸத்.

## "THE AUTOBIOGRAPHY OF A BRAHMIN GIRL"

## "முத்துமீனாக்ஷி."

(153-வது பக்கத்தொடர்ச்சி.)

பத்துவயதிலே வாழ்க்கைப்பட்டு, நாய் படாதபாடெல்லாம்பட்டுப் பிள்ளையில்லையென்று பேயாட்டம் ஆடிப் பிந்திக் கணவனையுமிழந்து கைம்பெண்ணாகிக் கடைசியாகப் பிறந்தவீடுவந்துசேர்ந்த முத்துமீனாக்ஷிக்கு உண்மைக் காதல் என்னவென்பது இன்னும் தெரியாது. ஏதோ தன் மூத்தாள் பெண்ணுக்கு வந்த மாப்பிள்ளை தன்னைப்பார்த்து மோகித்ததைக் கண்டு தன்னிடத்திலுள்ள வசியசக்தியின்னதென்று ஒருவாறுணர்ந்தாலும், உண்மையில் "காதல்" என்பது இன்னதென்பதை யின்னுமறியாமலே யிருந்தாள். தன் தமயனுக்குக் குழந்தை பிறந்ததும் தன் அன்பையெல்லாம் அக்குழந்தை மேற்செலுத்தி இதுகாறும் வெளிப்போக்கின்றி உள்ளத்தமர்ந்து கிடந்த அன்புக்கு ஒருபோக்குண்டாக்கப் பார்த்தாள். அவள் 'மதினியும் அவள் சித்தியும்' அக்குழந்தையை அவள் தொட்டால் அதற்குத் தோஷம்வந்து விடுமென்று சொல்லித் தடுக்கவே மனமருகி அதையும் தொட அஞ்சினாள். அவர்களில்லாத பொழுது அக்குழந்தை யழுதபோதும் அதைத் தொடாமற்றானே தொட்டிலையாட்டிப் பாடினாளே யன்றி, அழுகிறகுழந்தையை வாரியெடுத்து மாரோடணைத்து மடியில் வைத்துத் தாலாட்டும் பாக்கியம் அவள் கொடுத்து வைக்கவில்லை. இப்படி அவள் மனம் தாமரையிலையிற்றண்ணீர்போல் எதிலும் ஒட்டாது தத்தளித்துக்கொண்டிருக்க, 'உள்ளன்பு' என்னும் உண்மையான கற்பகச்செடி, கொழுக்கொம்பில்லாக் கொடிபோல், எதைப்பற்றிக்கொண்டு வளருவோமென்று தபித்துக்கொண்டிருந்தது. அவள் உள்ளத்தின் உண்மை நிலையை உள்ளபடியறிந்து அவள் நிலையிலிருந்து பார்க்குங்கால், அவள் பட்ட கஷ்டங்களெல்லாவற்றிலும் அவள் தொட்டிலைப்பிடித்து தாலாட்டிக்கொண்டிருந்தபொழுது அவள் உள்ளம் உள்ளன்புபூரித்துத்தவித்ததவிப்பு கல்லையும் கரையச்செய்யும் சக்திவாய்ந்ததாயிருந்தது: இதுசத்தியமென்று அந்நிலையிலிருந்துன்னிப் பார்த்த நான் என் உள்ளத்துணர்வைக்கொண்டு உண்மையாகச் சொல்லுவேன். முத்து மீனாக்ஷி யிதுவரையிற் பட்ட கஷ்டங்களெல்

லாம் சகிக்கரியதேயாயினும் உள்ளன்பில்லா அவளுக்கு எல்லாமுரியதேயென்று அவளினு முயர்ந்த படியிலிருந்து பற்றறப் பார்ப்போர் நினைக்கத்தக்கதாயிருந்தது. ஆனால் இத்தருணத்திலோ தேவரும் மூவரும் அவள் நிலையையறிந்து நெஞ்சுருகிவருந்தாதிரார். இதுகாறும் அவளிடத்தில் உண்மையான உள்ளன்பு உதிக்கவில்லை. ஆனால் அக்குழந்தையினிடத்திலுண்டான உள்ளன்பு உண்மையானதே. அதைத் தடுக்கவும், அவள் உத்தம நெஞ்சம் தவித்ததவிப்பு அவளை யொரு தபஸ்வினியாக மாற்றிவிட்டது. அச்சமயத்தில் அவள் தன் மதினியைச் சபித்திருப்பாளானால் அது கட்டாயம் பலித்திருக்கும். ஆனால் உண்மையான **உள்ளன்பு** பிறரிடத்துக் குறைகூறுவதில்லை. அது எல்லாம் பொறுக்கும் வன்மையுடையது. யாரிடத்தும் தீங்கு நினையாதது: தன்னைக் கொடுத்துப் பிறரை இரக்ஷிக்கும் சக்தியுள்ளது. குழந்தையைத் தொட்டால் அதற்கும் கேடு வருமென்று அவர்கள் சொன்னதைக்கேட்கவே, முத்துமீனாக்ஷி அவர்கள்மேல் குற்றங்கூறாது, தான் அவ்வளவு பாபியோ என்னவோ, நம்மால் அக்குழந்தைக்கு ஒரு தீங்கு வரவேண்டாமென்று தன் உள்ளன்பை யடக்கி, அக்குழந்தையின் தாயில்லாக் காலத்திலும் அதைத் தொடாமலே தொட்டிலைமட்டும் ஆட்டிவந்தாள். அவள் உள்ள மிருந்த உத்தமமானஉண்மை நிலையை “அன்பின் வலையிற் பட்டோன் காண்க’ என்றபடி ஜகதீசனே யறிவான். “அன்பர்க்கன்பானமெய்ய”னும் தயாபரக்கடவுள் இப்பொழுதே அவள் நிலையையறிந்து கடைக்கண் பார்க்கத் திருவுள்ளம் வைத்தானென்று சொல்லல்வேண்டும். முத்துமீனாக்ஷியின்எண்ணம்பிரபஞ்சப்பற்றுவிட்டமோக்ஷகாமியமானதாயிருந்தால் அத்தருணத்தில் பரமேசுவரனே சத்குருவாக வந்து அவளை யாண்டுகொண்டிருப்பார். ஆனால், “எண்ணினார்க் கெண்ணினவண்ண மிருந்தருள்புரியும்” ஈசன் செயலை யாரறிவார். காரணமறியக் கொடுத்து வைக்காத நாம் காரியத்தைக்கொண்டு தான் காரணத்தை யூகிக்கவேண்டும். காதல், என்பதை யுள்ளபடி யுணராமலே கணவனோடிருந்து வாழ்ந்து அந்தப் பொய் வாழ்க்கையுமிழந்து பரிதவிக்கும் அப்பெண்மணியின் உள்ளத்தை எல்லார்க்கும் அவரவர் எண்ணமிருந்தவாறுண்மையி லுணர்ந்து படியளக்கும் ஈசனல்லவோ அறிவான். அவன் செயலைத்தடுக்க வல்லார்யார்? வீணாக இப்பொய்யுலகம் “எல்லாம் நான், நான்” என்று, விழுந்து மேலெடுத்துப் போட்டுக்கொண்டு வீண்வாதனை விளைக்கிறது. அவரவர் “மனம்போலிருக்கும் மாங்கல்யம்.” ஆகையால் அதைத் தடுக்கவல்லார் யாருமில்லை. இப்படியவள் உள்ளமுருகித் தவிக்க, அன்பு நிறைந்து அகங்குழைய நின்றபோது நடந்ததை முத்துமீனாக்ஷி தானே சொல்லக்கேட்போம்:—

“நான் பாட்டுப்பாடித் தொட்டிலையாட்டிக்கொண்டிருந்தபொழுது, திடீரென்று வீட்டுவாசலிலே யொருவண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு அதிசுந்தர ரூபனான யௌவன புருஷன் வெளியே குதித்து, விரைவாய், “சுப்பிரமணியம்!” என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார். அந்தக் குரலைக் கேட்ட மாத்திரத்திலேயே எனக்கு மயிர்க்கூச்சுண்டாயிற்று. ஒன்றுந் தெரியாமல் ஸ்தம்பித்து அங்கேயே நின்று விட்டேன். உள்ளே வந்தவர் என்னை ஒரு நிமிஷம் திகைத்து நோக்கி, “யார் என் பெண்ட,—முத்துமீனாக்ஷியா?” என்றார். தலைமுக்காட்டை யிழுத்து முகத்தை மறைத்து, “ஐயோ” என்றலறிக்கொண்டு வீட்டுட்போய் விட்டேன்.”

இப்படி அகஸ்மாத்தாய் ஆகாசத்திலிருந்து குதித்தது போல் இந்தச் சமயத்தில் வந்துதித்த “அதிசுந்தரரூபன்” யாரெனில், இவளோடு குழந்தைப் பருவத்திற் பழகிய இவள் தமயனுடைய உயிர்த்தோழனான **சுந்தரேசனே** யன்றி வேறொருவருமில்லை. சுப்பிரமணியம் வந்தான். வரவும் தோழரிருவரும்கட்டித்தழுவிச் சந்தோஷித்த பின் பரஸ்பரயோகக்ஷேமங்களை விசாரிக்கத் தலைப்பட்டார்கள். சுப்பிரமணியன் உள்ளே போய் தன் “பெண்டாட்டிகையைப்பிடித்து கரகர வென்றிழுத்துவந்து சுந்தரேசன் முன்னே நிறுத்தி இவள்தான் என் பெண்டாட்டி” யென்று பெருமையாய்ச் சொல்லி, அதிலும் பெருமையாகத் தொட்டிலில்கிடக்கும் குழந்தையைக்காட்டி “அந்தப் பயல் தான் எங்கள் சீமந்த புத்திரன்” என்று தன் சிநேகிதனுக்கு அவனை விட்டுப் பிரிந்தபின் தனக்குக் கிடைத்த பாக்கியங்களைத் தெரிவித்து, அவனுக்குக் குழந்தைகளெத்தனையென்று விசாரித்தான். சுந்தரேசன் தனக்குத்தானே குழந்தையாக விருப்பதைச் சமத்காரமாகத் தெரிவித்து இல்லறத்தைப் பழித்து ஸம்ஸாரதுக்கம் பெரி

தென்று வேதாந்தப் பாட்டுகள்பாட ஆரம்பித்தான். சுந்தரேசன் கலியாணமாகாக் காளையென்று சுப்பிரமணியன் அறிந்துகொண்டான். அவனுடையமதினி வெகுநாளாக அவளுக்குத்திட்டம் செய்து வதைத்ருந்த அவளுடைய அம்மங்காரை, அவன் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதிக்கவில்லை யென்று அவனுடைய தமயனார் பெண்டாட்டி பேச்சுக்கிணங்கி அவன் பாகத்துக்குள்ள பிதிரார்ச்சித்சொத்தைப் பாகித்துக் கொடுத்து வீட்டை விட்டுப்போம்படி மரியாதையாக அனுப்பிவிட்டார். அவன் பி. ஏ. பரீக்ஷை கொடுத்து பி. எல். பரீக்ஷையில் தவறிப்போய் விட்டானாம். கலியாணம் வேண்டாமென்று தேசயாத்திரை செய்யப்புறப்பட்டு வந்ததாகத் தெரியவந்தது. முத்துமீனாக்ஷியைக்காணவும் அவன் வைராக்கியம் விரக்தியெல்லாம் பறந்தோடி விட்டது போலும். முத்துமீனாக்ஷியே யென்னசொல்கிறாள் கேட்போம். அவள் யதார்த்தவாதி யாதலால் உண்மையை ஒளிக்காமற் சொல்வாள். அவள் சொல்வதைக்கேட்போம்:—

"அந்தோ! ஒருவரை யொருவர் பார்த்ததுமுதல் எங்களிருவருக்கும் மெய்க் காதல் பிறந்து விட்டது. நான் அவருடன் பேசுவதில்லை. என் தமையன் எவ்வளவு சொல்லியும், பழையநாள் பரிகாசங்களையும் பழக்கத்தையும் நினைப்பூட்டியும், என்மொட்டைத் தலையுடன் அவர் எதிரே நிற்கவும் என்மனம் இணங்கவில்லை." அவர்களிருவருக்கும் பேச்சுவார்த்தை சிறிது மில்லாவிட்டாலும், முத்துமீனாக்ஷியே அவரைக்காணவும் பேசவும் பின் வாங்கினாலும், அவர்கள் கண்கள் "எவ்விதமாயினும் தெரிந்தோ, தெரியாமலோ, தினம் ஒரு முறையாவது, ஒரு நொடிப்பொழுதாவது சந்திக்கும்: அந்த வினாடியில் மனத்தில் நடக்கும் குழப்பமெல்லாம் ஒருவருக் கொருவர் பகிரங்கமாய் விடும்; எவ்வளவு திடப்படுத்திக் கொண்டாலும் மறைக்கமுடியாமற் போய்விடும். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கில் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில' என்றார் மனதின் இரகசியங்களை நன்கறிந்த மஹான்— என்கிறாள் முத்துமீனாக்ஷி. கதையை வீணாகவளர்த்துவானேன். கண்ணொத்தது; கருத்தொத்தது; மனமொத்தது; மண்டைவிதியுமொத்தது. சுந்தரேசன் இருந்திருந்து போகும் பொழுது தன் மனக்கருத்தை சுப்பிரமணியனுக்குத் தெரிவித்து ஒரு கடிதமெழுதி, தன் கருத்து அவனுடைய மனதுக் கிசைந்திருந்தால் அதற்குள்ளடக்கம் செய்த கடிதத்தை முத்துமீனாக்ஷியிடங் கொடுத்து அவள் பதிலை அவனே வாங்கித்தனக்கு நேரிலனுப்பும்படி யெழுதிக் கொடுத்துவிட்டுப்போய்விட்டான். சுப்பிரமணியனும் தங்கையையழைத்து, கடிதத்தைக் கொடுத்து அதனுள்ளே யிருப்பது அவள் மனதுக் கிசைந்திருந்தால் அவனுக்கும் அது ஸர்வசம்மதமாமே யென்றும், எப்படியாவது அவள் சந்தோஷமாயிருக்கப் பார்க்கவேண்டியது அவன் கடமையென்றும் சொல்லி அவளைமட்டும்தன்னறையில்விட்டு தான் கதவைப்பூட்டிக் கொண்டு வெளியே போய்விட்டான். முத்துமீனாக்ஷியும் தன்னிஷ்டத்தைத் தெரிவித்துக் கடிதமெழுதிக் கொடுத்தாள். சுந்தரேசன் தமையன் முதலானோர் இச்சம்பந்தத்துக் கிணங்கவில்லை. சுப்பிரமணியனும் அவன் மனைவியின் உள்ளக்கருத்தையறிந்து கொண்டு அவர்கள் யாரோடும் இது சங்கதியைச் சொல்லாமல், தன் தங்கையை நகையின் பொருட்டு நடக்கும் வியாச்சியத்துக்காக அவள் புக்ககத்துக்கழைத்துக்கொண்டு போகிறதாகச் சாக்குச்சொல்லி, வடக்கேயுள்ள ஒரு பட்டணத்திற் கொண்டுபோய் புனர் விவாகம் செய்து கொடுத்துவிட்டான். சுந்தரேசனும் முத்துமீனாக்ஷியும் புனர் விவாகமான புருஷனும் மனைவியுமாய் பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு கடைசியில் பம்பாயில் தங்கி வசிக்கத் தீர்மானித்தார்கள். பிராம்மணர்கள் அவர்களை வழக்கம்போல் ஒதுக்கிவைத்து ஆபத்து சமயத்துக்குதவாமல் ஜாதிப்பிஷ்டர்களாய் நடத்தினார்கள். சுந்தரேசன் ஒன்றுக்கு மஞ்சாமல், அன்பின் வலையிலீடுபட்டு எல்லாத்துன்பங்களையும் சகித்துக் கொண்டு, என்னைப்போல் சந்தோஷமுள்ளவர்கள் இவ்வுலகி லார் இருக்கிறார்களென்று சொல்கிறான். கணவனும் மனைவியும் "காதலிருவர் கருத்தொத்து ஆதரவுப்பட்டதே யின்பம்" என்று உண்மையான சிற்றின்பசுக மனுபவித்து குஞ்சுகுழந்தைகளோடும் வாழ்ந்து வருகிறார்கள். கரைகடந்த வெள்ளம் அணையொன்றையும் பாராது என்கிற வசனப்படி, ஜாதிக்கட்டு திட்டமெல்லாம் கடந்து உள்ளன்பு மிகுதியால் உண்மையான புருஷன் மனைவியான இருவ

ரும் மனதொத்து சந்தோஷமாக வாழ்ந்து வருவதன்றி இங்கிலீஷ் மோஸ்தரில் பிரியம் வைத்த சுந்தரேசன் குணக்குக்கிசைந்து முத்துமீனாக்ஷி தன் கணவனை ஏகவசனமாகவும், "வாடா, போடா" என்றும் கூப்பிட இசைந்து விட்டாள். அன்பின் கூத்தை யாரறிவார். ஜாதிக் கட்டுப்பாடுமட்டும் இவர்கள் நிமித்தம் சிறிதும் குறையவில்லை. குழந்தைகளுக்கு விவாகமாக வேண்டுமே, கடைசி வரையில் ஜாதியார் விட்டுக் கொடுக்காமலிருந்தாலென்ன செய்கிறதென்று முத்துமீனாக்ஷி கேட்டதற்கு, மிஸ்டர்சுந்தரேசய்யர் கிறிஸ்து மதமிருக்கு: அதில் சேர்ந்துவிட்டால் அப்பொழுது என்னசெய்வார்கள் என்று அலக்ஷியமாகச் சொல்லி தன் சந்தோஷத்திலே மூழ்கிக்கிடக்கிறான். இவர்கள் ஆனந்தம் இடையறாது தொடர்ந்து பேரானந்தத்தில் முடியப் பிரார்த்திக்கிறோம்

இப்படிப்பட்ட தீரர்கள் இருவரும், இவ்வளவு உண்மைக்காதற் புணர்ச்சியால் பிறந்த குழந்தைகளும் கிறிஸ்துமதத்திற் போகவிட்டு, கலியாணம் செய்து கொள்ளாத கைம்பெண்களும், புருஷனை வைத்துக் கொண்டே வியபசாரம் போன ஸ்திரீகளும் பெற்ற குழந்தைகளையும் அவர்களைப் பெற்ற தாய் தந்தையர்களையும் ஹிந்துக்களாகவைத்துக் கொண்டாடுவதில் ஹிந்து சமூகத்திற்கு என்ன லாபமோ, இவர்களையும் அவர்களோடொத்தவர்களாகவாவது ஹிந்து சமூகத்திலிருக்க விடுவதினால் வரும் நஷ்டமென்னவோ அறிகிலேமென்பது இதைப் பிரசுரித்த கிரந்தாசிரியரின் உள்ளக் கருத்தாயிருக்க வேண்டுமென்று ஸபஷ்டமாய்ப் படுகின்றது. இது உண்மையான ஒரு சம்பவமாக விருத்தலால் இப்படிப்பட்டது எத்தனையோ நேரிடலாமதலாலும் இதைப்பற்றி ஹிந்துக்களாயுள்ளோர் யாவரும் சிந்திக்கவேண்டியது அவர்கள் கடமையாம். உண்மையை ஒளிப்பதனாலும், அக்கிரமத்தை யடக்கி மூடிவைப்பதினாலும் பிரயோஜனம் ஒன்றுமில்லை. உண்மை யெப்படியும் வெளியாகிவிடும். அக்கிரமம் எவ்வளவு பத்திரமாக மூடிவைத்தாலும் அழுகினபிணம் தன்னிருப்பைத் தெரிவிப்பதுபோல், அதன் துர்நாற்றம் எப்படியும் மேல் கிளம்பி, முன்னிலும் பன்மடங்கு அதிகமாக வீசி, வியாதி வெக்கைகளையும் கொணர்ந்து விடும். இது மட்டும் சத்தியம். பொய் சொல்லி வாழ்ந்தாரில்லை. மெய் சொல்லிக் கெட்டாரில்லை. இந்த உண்மையனுபவத்தைக் கிரகிக்காதவரையில் யாரும் உறுப்படார்.

C. V. S.

# அறிவுறுத்தல்.

ஆமாறுன் திருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகியானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே.—திருவாசகம்.

## MUMUKSHUTARAKA, OR, 'THE WAY TO SALVATION' BY SANKARA.

ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள்

உபதேசித்தருளிய

# முமுக்ஷுதாரகம் அல்லது, "பஜகோவிந்தம்"

என்னும்

## ஸ்ரீ கோவிந்தமஞ்சரிகா ஸ்தோத்திரம்.

ஆசார்ய ஸ்வாமிகள் உபதேசித்தருளிய இச்சிறிய நூலிற் கூறியவிஷயம் யாதென்னில், இவ்வுலக வாழ்க்கையானது தாமரையிலையிற் றங்கிய நீர்போல அதி சஞ்சலமானதென்றும், இதில் அடையும் சுகம் சிறிதேனும் இல்லையென்றும், இதில் தேடும் பொருளும் சுற்றமும் துன்பத்துக்கே ஏதுவாதலன்றிப் பரத்துக்கு எத்துணையும் பயன்படாவென்றும், பிறப்பு நீங்கி முத்தியடைதற்கு மார்க்கம் ஆசையை ஒழித்து அமலன் அடியில் இடையறு நேசம்பூணுதலே யென்றும் ஆம். சுருங்கச் சொல்லுமிடத்துப் பத்தி ஞான வைராக்கியமே மோட்சத்துக்குச் சாதனமாகுமென்பது இந்நூலின் கருத்து.

இனி இந்நூலின் விஷயத்தை விரிவாக ஆராய்வோமாக. முதற் செய்யுளில், கோவிந்தனையே சர்வகாலமும் நேசித்துப் பூசித்துத் தியானித்தலே முத்திக்கு மார்க்கமென்று கூறி, இதனைப் பின்வரும், செய்யுள் ஒவ்வொன்றுக்கும் இறுதியில் * பல்லவியாகக் கொள்ள வைத்தலின், இந்த ஈச்வரபஜனமே முத்திக்கு இன்றியமையாத முதற் சாதனமாகக் கூறியதாயிற்று. அது எப்படி யென்னில்—

1. "கோவிந்தனையே குறியாய் குறியாய்
கோவிந்தனையே குணனின்மதியாய்!
சாவந்தணைநாள் 'டுக்ருங்கரணே'
ஆவந்துனையன்பினளித் திடுமோ?"

அதாவது, அடா! நற்குணமில்லாத மூடான்மாவே, உனக்கு மரணகாலம் சமீபிக்கும்போது 'டுக்ருங்கரணே 'டுக்ருங்கரணே' என்று ஜபிக்கும் இந்த ஜபமானது அந்தோ! உன்னை அன்போடுவந்து ரக்ஷிக்கவல்லதோ? ஏன் வீணுக அதைச் செபித்துக்கொண்டு காலத்தைப் போக்குகின்றாய்? பிறவிக்கடலில் நின்று எடுத்துயர்த்தி உஜ்ஜீவிப்பிக்கும் தாரக மந்திரமாயுள்ள கோவிந்தநாமத்தைச் செபித்துப் பகவான் திருவடிகளைத் தியானிப்பாயாக. இதுவே உனக்கு உறுதியானது என்றபடி. இவ்வுபதேசம், கங்காதீரத்தில் ஒருவன் சப்த சாஸ்திரம் ஒன்றையே கற்றுப், பவசாகரோத்தாரகமாகிய தாரகமந்திரத்தை அறியாமல், தான் கற்றிருந்த டுக்ருங்கரணே' என்னும் சமஸ்கிருத தாதுவையே அடிக்கடி உருவிட்டுக் கொண்டிருக்கக் கண்டு, ஸ்வாமிகள், அவன் பேதைமைக்கிரங்கிக் கருணைகூர்ந்து அம்மூடபண்டிதனுக்கு ஓதியருளியதென்பர். ஆயினும் இவ்வுபதேசம் யாவர்க்கும் பொதுவானதேயாம்.

முதற் செய்யுளில் ஈச்வரபஜனமே முத்திக்குச் சாதனமென்று பத்தியின் விசேஷத்தைக் கூறி, பத்தியைச் செய்யுங்கால் ஆசைகளை யொழித்துச் செய்தல் வேண்டுமென்பதை உணர்த்தும் பொருட்டு அவ்விஷயத்தை அடுத்த செய்யுளிலே கூறுகின்றார். 'ஆசாசாத்பாமம் துக்கம் நிராசாத்பாமம் சுகம்' என்றபடி, ஜனனமரணாதி துக்கங்கள் யாவும் மனிதர்க்கு ஆசாதிக்கியத்தினலே உண்டாதல் பற்றி, அவ்வாசையையறுத்தலும் மோக்ஷத்துக்கு இன்றியமையாத ஓர் சாதனமாகும் என்னும் உண்மைப் பன்முறையும்

* இது முதல் நூலில், "பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே" யென்று வெகு அழகாகவும், உருக்கமாகவும், கம்பீரமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

வற்புறுத்துகின்றார். ஆசையானது எந்தெந்தப் பொருள்களின்மேற் செல்லுகின்றதோ அந்தந்தப் பொருள்களைப்பற்றிப் பற்பலவிதமாகும். இவற்றுள், மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இம்மூன்றும் முக்கியமானவை. மண்ணாசையானது பொருளாசையுள்ளே அடங்குமாதலின் அதனை வேறு பிரித்துக் கூறாமல், மற்றிருவகை ஆசைகளையும் துறக்க வேண்டுமென்று கூறுகின்றார். அவ்விருவகை ஆசையினும் பொருளாசை பொருள் சேரச்சேரக் குறைவுறாமல் வர்த்திக்குமாதலின் மிகக்கொடியது என்பதை யுணர்த்த அதனை முதலில் வேருடன் களைய வேண்டுமென்று முதற்கண்கூறி, இதன்பின் மூன்றாவது செய்யுளில் பெண்ணாசையைத் துறத்தலைக் கூறுகின்றார். இவ்விருவகை ஆசையையும் துறக்கவேண்டுமென்று கூறியவாற்றானே அவற்றைத் துறத்தற்குரிய உபாயமும் உடனே கூறுகின்றார். பொருளாசையைத் துறத்தற்குபாயம் அடிக்கடி அவ்வாசை எழுந்தோறும் அதனை எழவொட்டாமல் அடக்கும் நற்புத்தியை அப்பியாசத்தினால் ஸ்திரப்படுத்திக் கொள்ளலும், நல்வழியாற் பெற்றபொருள் சிறிதாயினும் அதனால் திருப்தி யடைந்திருத்தலுமாம் என்றும், மற்றைப் பெண்ணாசையைத் துறத்தற் குபாயம் காமத்தை விளைக்கும் அவரது அவயவங்களைப் பகுத்து நோக்கி அவை அறுவெறுப்பான மாம்சம் கொழுப்பு முதலியவற்றின் விகாரமேயென்று கருதுதலுமாம் என்றும் காட்டுகின்றார். எப்படி யென்னில்:—

2. "துறவாய் பொருளாசையினைத் துணிவா
உறுவாய் நசை தீரொரு நன்மதியை
நெறிவாய் வருமோர் நிதியாலுவகை
பெறுவாய் நிறை பேதைமையாய் பெரிதே."

3. "மடவார் வளர் மென்றனமும் வடிவும்
கடுமோகமனத துறனீ கணுற்றீஇ
முடையார் தசையின்றிரி பென்று முறா
விடுவாய விடுவாயதன்மேல் விழைவே."

அதாவது, பொருளை நிலையாகவெண்ணிப் பொருண்மேல் வைத்திருக்கும் உன் ஆசையை நீ முற்றிலும் விட்டொழிந்து ஆசாபாசங்களை யகன்று ஸ்வஸ்தமாயிருக்கும் உத்தமமாகிய உயர்ந்த புத்தியை உறுதியாகப் பெற்றுக்கொள்வாயாக. நல்லொழுக்கத்தில் நின்று முறை பிறழாமல் சம்பாதிக்கும் திரவியம் சொற்பமாயினும் அதனால் மிகவும் மனச்சந்துஷ்டி யடைவாயாக. அன்றியும், பெண்களுடைய வடிவையும் அழகையும் கண்டு காமப்பேய்பிடித்து நிறையழிந்து மனமயங்குதலொழிவாக. அவற்றைக் காணுந்தோறும் அவை அருவெறுப்பான மாம்ச விகாரமென்று அறிவால் நிச்சயித்து அவற்றின்மேல் ஆசைவையாமல் அவ்வாசையை நீக்குவாயாக என்றபடி.

பின்பு, இவ்வாசைக்குக் காரணமாயிருப்பது நீர்மேலெழுத்துப்போலும் இச்சரீரத்தின் நிலையாமையை அறியாது நாம் நெடுங்காலம் கற்கோட்டைபோல் அழியாமல் சீவித்திருக்கப் போகிறோமென்னும் பேதைமையாலே நமக்கு மாடுவேண்டும் மனைவேண்டும் என்று எண்ணுவதாதலின், அப்பேதைமை மாறும் பொருட்டு, இவ்வாழ்க்கையானது தாமரையிலையில் நீர்போல அதி சஞ்சலமானதென்றும், இன்னபோதென் றறியமுடியாமல் எந்தக்கணத்திலாயினும் பங்கமாகக் கூடியதென்றும் நான்காவது செய்யுளிற் கூறுகின்றார். அன்றியும், இவ்வநித்தமாகிய வாழ்வுதானும் சுகமுள்ளதோ வென்னில் அதுவுமில்லை. எத்தனையோ வியாதிகளுக்கு ஆஸ்பதமாய் அகங்காரத்தால் விளைவனவாகிய அனேக துன்பங்களுக்கு மிடமானது. ஆதலின் இவ்வநித்தியமான துக்கரூபமான வாழ்க்கையை நம்பி மாடு மனைகளைத் தேடி ஆசையைப் பெருக்குவது அவிவேகமென்று அதே செய்யுளிற் போதிக்கின்றார். எப்படி யென்னில்—

4. "மரைவாளிலை மேன் மணிபோன் மிளிரும்
ஒரு நீருறழுஞ் சிறுவாழ்வுதுதான்
பெருநோயொடுகோதல்பிடித்துலையத்
தருசோக மதிற்றளரும்முலகே."

அதாவது, மனிதருடைய அற்பமான உயிர்வாழ்க்கையானது தாமரையிலைமேற் றளும்பித் தத்தளிக்கும் நீர்த்துளிபோலச் சற்றும் நிலையில்லாததாகும். அந்நிலையற்ற சிறுவாழ்வுதானும் இன்பத்தைத் தருவதோ வென்னில் அதுவுமன்று: உலகிலுள்ள ஜனங்கள் கொடிய வியாதிகளால் பற்றப்பட்டு அபிமானம் மேற்கொண்டு மிகவும் துயரமுற்றுவருந்துவார்கள் என்றபடி.

நமதுயாக்கை நிலையில்லாததேயாயினும், மனைவி மக்கள் முதலான சுற்றத்தார் நமக்கு உயிர்போல விரும்பத் தக்கவரன்றோ? அவர்களைப் பாதுகாக்கும் பொருட்டும் அவர்கள் நமக்குப் பிற்காலம் அநுபவவித்துச் சுகிக்கும் பொருட்டும் ஆஸ்தியைத் தேடிவைக்க வேண்டாமோ வென்னில், அம்மனைவி மக்கள் முதலான சுற்றத்தாருடைய தன்மை நீ அறியாய்போலும் என்று அவருடைய சுபாவத்தை யெடுத்து ஐந்தாவது செய்யுளிற் கூறுகின்றார். எப்படி யென்னில்—

5. "தேடுந்திறனுள்ளளவுஞ்செறிவார்
கூடும்பிரிவாற்றமர்பின்கொடுநோய்
நீடுந்தனுவள்ளுயிர்நின்றுழியும்
கேடின்றுளையோ வெனவுங்கிளவார்."

அதாவது, மனைவிமக்கள் முதலான பந்து வர்க்கங்கள், உனக்குப் பொருள் சம்பாதித்து அவர்களைப் போற்றத் திறமையுள்ளமட்டுமே, மிக்க அன்போடும் உன்னைச்சூழ்ந்து நிற்பார்கள். உனக்குச் சம்பாதிக்கத்திறமை தப்பியபின், கொடிய நோயினால் அடிபட்டு வருந்தி மெலிந்த உன்தேகத்தில் உயிர் இன்னமும் விட்டு நீங்காமல் இருப்பினும்கூட உன்னை உயிருள்ள மனுஷ்யனாகப்பாவித்து லக்ஷ்யம்பண்ணி 'என்ன, இருக்கிறாயா க்ஷேமமா' என்று ஒருவார்த்தைகூடப் பேசமாட்டார்கள் என்றபடி.

ஆதலின் மனைவிமக்கள் முதலான சுற்றத்தாருக்காகப் பாடுபட் டுழைத்து உன்னுடைய ஆன்மலாபத்தை யிழந்து பிறவிக்கு வித்தாகிய வினையைத் தேடிக்கொள்வதுபோல அறிவீனம் வேறில்லை என்றனர்.

பின்னும், அப்படிக்கன்றி ஒருவேளை உன்னிடத்தில் அவர்கள் விசுவாசமாயிருப்பினும் எத்தனை நாளைக்கு அவர்கள் விசுவாசம் நிலைநிற்கப்போகிறது? உன்னுயுள்மட்டும் தானே, அதற்கு மேலும் உண்டோ? உடலைவிட்டு உயிர் குதித்ததானால் உன்னைப் பிணமென்று கைவிட்டுத் தூர விலகுவார்களே யன்றிக் கிட்ட நெருங்குவார்களா? உன்னையுயிர்போல நேசித்த மனையாள்கூட உன்சவ சரீரத்தைக்கிட்ட அஞ்சுவாளன்றோ என்று ஆறுவது செய்யுளில் கூறுகின்றார். எப்படி யென்னில்—

6. "எந்நாள்வரையெய்திடுமோவியுடல்
அந்நாள்வரையாவருமன்புறுவார்
உன்னாருயிர்போயுடல்பங்கமுறின்
துன்னுளதையஞ்சுவள்தாரமுமே."

அதாவது, ஆவியானது உடலினுள்ளே எத்தனைகாலம் தங்கியிருக்குமோ அத்தனைகாலமும் மனைவிமக்கள் முதலான உறவினரெல்லாரும் உன்னிடத்தில் அன்பு பாராட்டி உன் யோகக்ஷேமங்களை விசாரிப்பார்கள். அவ்வுயிர் தேகத்தினின்று நீங்கித் தேகத்துக்கு அபாயம் வந்தகாலத்தில், உன்மனைவிதானும் அச்சவசரீரத்தை அடுக்க அச்சமுடைவாள் என்றபடி.

யிற்க, நீ தேடும் பொருளினால் உனக்கு ஆயுள்பரியந்தமேனும் எதாவது குணமுள்ளதோவென்னில், சிறிதும் இல்லை. நீ சம்பாதிக்கும் அர்த்தம் உனக்கே அநர்த்தமாக முடியும். பொருள் தேடிவைத்த பேர்களுக்குக் கள்வர் தாயத்தார் முதலானவர்களாலுண்டாகும் கெடுதிகளேயன்றித் தாம் விரும்பிப் பெற்றுவளர்த்த பிள்ளைகளாலும் அநேகம் கெடுதிகளுண்டாகுமென்று அடுத்த செய்யுளிற் கூறுகின்றார். எப்படியென்னில்;—

7. "பொருள்கேடிதுநீயறிவாய்புகல்வேன்
வருமோர்சுகமொன்றிலதான்மதியாய்
இருமாநிதிதேடியவர்க்கினிய
அருமாமகராலுமணங்குறுமே."

அதாவது, செல்வமானது எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாகும். இதனை நீ தெரிந்து கொள்வாயாக. அச்செல்வத்தினால் நமக்குண்டாகும் சுகம் சிறிதும் இல்லை. பெருஞ் செல்வத்தை வருந்திச்சம்பாதித்தவர்களுக்கு அவரது இனியபுத்திரர்களாலும் அநேக துன்பங்களுண்டாகும் என்றபடி.

இவ்வாறு மாதர்மீதும் மனைவி மக்கண்மீதும் வைத்த மயலும் காதலுமே பரத்தியானத்துக்கு முற்றும் இடையூறாயிருப்பனவாதலின் முமுக்ஷுவானவன் அவற்றை விட்டொழிதல் வேண்டுமென்று இதுகாலும் விவரித்துக்கூறிய விஷயத்தையே முடிவாகத் தொகுத்துக்கூறி மேலே பிறவிஷயங்களை உணர்த்தப் போகின்றார். ஆதலின். அவ்வாசைகள் தோன்றுதற்குரிய பருவங்களையும் எட்டாவது செய்யுளில் எடுத்துக்கூறுகின்றனர். ஒருவனுக்கு ஸ்த்ரீ சித்தனாக உழலுகின்ற யௌவனகாலத்திலும், தாராபுத்திராதிகளில் மனஞ் சென்றுழலும் வார்த்தக்கிய காலத்திலும் தான் பரத்தியானத்துக்கு இடமில்லாமற் போகிறது. அவ்வாசைகள் பற்றாத பால்யப் பருவத்திலாவது பரத்தியானத்துக் கிடமுண்டோவென்னில், அப்போதும் அந்தத்தியானம் செய்தற்குரிய அறிவும் திறமையும் இல்லாமையினாலும், அப்பருவத்துக்கேற்ற விளையாட்டின்மேல் மனம் செல்லுதலாலும், அது சாத்தியப்படுவதில்லை. ஆதலின், அறியாதகாலமாகிய பால்யத்தில் பரத்தியானம் கைகூடாமையின் அறிவு தோன்றிய பிற்காலங்களிலேனும் அத்தியானத்துக் கிடையூறாயிருக்கும் ஆசைகளை யகற்றி மனத்தைப்பரத்தில் செலுத்தவேண்டுமென்று போதிக்கின்றனர். எப்படியென்னில்—

8. "மழவாய்விளையாடலின்மேன்மனமாம்
உழைநேர்விழிமீதுறுகாளையினே
கிழமாய்மனைமக்களின்மீதுகெழும்
விழையார்பரமாவிமலன்கழலே."

அதாவது, மனிதர்கள் பால்யராயிருக்கும்போது விளையாட்டில் தமது கருத்தைச் செலுத்துவார்கள். யௌவனதசையில் யுவதிகளாகிய ஸ்த்ரீகளின்மேல் தங்கள் மனசைச் செலுத்துவார்கள். கிழத்தன்மையில் மனைவி மக்கள்மேல் மனம் பதிந்தவர்களாயிருப்பார்கள். ஆதலின் ஒருநாளும் சர்வோத்தமனாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் திருவடிகளைத் தியானிக்கமாட்டார்கள்—என்றபடி.

பின்பு, பொருளாசையையும் பெண்ணாசையையும் ஒழித்தற்குத் தான் மார்க்கம் போதிக்கப்பட்டது. மனைவிமக்கள் முதலான சுற்றங்களிடத்தில் வைத்த காதலை எவ்வாறு நீக்கிக்கொள்வதென்னில் அதற்கு மார்க்கமும் ஒன்பதாவது செய்யுளில் கூறுகின்றார். அதுவும் அவர்களுக்கும் உனக்குமுள்ள உண்மையான சம்பந்தத்தைப் பகுத்து நோக்கித் துணியின் நீங்கு மென்கின்றார். இச்சுற்றத்தார் எல்லாம் நமக்கு இப்போது இவ்வுடலின்கண்ணே இடையில் தோன்றிய சம்பந்திகளேயன்றி அநாதியாயுள்ள ஆன்மாவுக்கு எவ்வளவும் சம்பந்தமாகமாட்டார்கள் என்றும், இடையில் தோன்றியவாறே பிரிந்து போவார்க

ளென்றும் ஊகித்தறிந்து அவர்கள் பொருட்டுச் சஞ்சலமடைந்து வருந்துதல் அறிவீன மென்றுணர வேண்டுமென்று கூறுகின்றனர். எப்படி யென்னில்—

9. "மனையாளெவணின் மகர்தாமெவர்காண்
நினைநல்குமுனம்மெவணின்றனைநீ
புனைவாழ்விதுதான்புதுமைத்ததுவால்
இனியுண்மையறிந் தெறிவாய்மயலே."

அதாவது, இப்போது உனக்குமனைவியாக வாய்த்திருப்பவள் அதற்குமுன் யாவளாயிருந்தனள்? உனக்குப் புத்திரராயுற்பவித் திருப்பவர் உன்வயிற்றிற் பிறப்பதற்கு முன்யாவராயிருந்தனர்? உன்னை உன் மாதா பிதாக்கள் புத்திரனுகப்பெறுவதற்குமுன் நீதான் எங்கிருந்தாய்? இவற்றை யெல்லாம் உட்புகுந்து ஆலோசிக்கின் இப்பிரபஞ்சவாழ்க்கையானது அதிவிசித்திரமாகத் தோன்றும். ஆதலின், இனியேனும் வேதாந்த விசாரணைசெய்து உண்மையை யுணர்ந்து அம்மனை விமக்கள்முதலான சம்சாரத்தில் வைத்துள்ள பிராந்தியை ஒழிப்பாயாக. என்றபடி.

பின்பு இவ்வாசாபாசங்கள் எல்லாம் ஒருங்கே நீங்கி முத்தியடைதற்கு மார்க்கம் சத்ஜன சங்கமே யென்று பத்தாவது செய்யுளில் கூறுகின்றார். எப்படியென்னில்

10. "மேலோருறவாலறும்வேறுறவே
மாலேயறுமவ்வுறவின்மையினல்
தோலாவுணர்வாமயல்சோர்கையினல்
மேலாமுணர்வால் வரும்விடதுவே."

அதாவது, வேதாந்த சிரவண மனனுதிகளாலே பரிசுத்தமடைந்த உள்ளத்தையுடைய மகாத்துமாக்களின் சகவாசத்தைப் பெறுதலினுலே மற்றப் புத்திர மித்திரகளத்திராதிகளில் வைத்த பற்று நீங்கும். அப்பற்று நீங்கலாலே தனுதிகளில் வைத்த மோகம் நீங்கும். அவ்வாறு தனுதிகளில் வைத்த மோகம் நீங்குதலாலே நிச்சலமான நிர்மலஞானமுண்டாகும். அந்த நிர்மலஞானத்தைப் பெறுதலினுலே ஜீவன்முத்தியுண்டாகும் என்றபடி.

இவ்வாறு சத்சகவாசம்பண்ணி மெய்யுணர்வைச் சாதித்துக்கொள்ளின், கயிற்றிற்றோன்றிய அரவம்போலவும், கானலிற்றோன்றிய ஜலம்போலவும் அறிவின்கட்டோன்றிய இந்தப்பிரபஞ்ச மயக்கம் தீருமென்பதை கக-வது செய்யுளில் வற்புறுத்துகின்றனர். இளமையுள்ளமட்டுமே காமவிகாரமும், நீருள்ள மட்டுமே மடுவும், கைப்பொருளுள்ளமட்டுமே சுற்றத்தார் முதலானபரிவாரங்களும் உள்ளவாய் அவை போனபின் எவ்வாறு நீங்கிவிடுகின்றனவோ அவ்வாறே அஞ்ஞான முள்ளமட்டுமே அதன்காரியமாகிய பிரபஞ்ச முன்னின்று ஞானமுதித்தவுடனே பிரபஞ்சமயக்கம் தீர்ந்து முத்தி யுண்டாகும் என்று. போதிக்கின்றனர். எப்படி யென்னில்—

11. கடிகாமமெனுமிளமைக்கழிவில்
மடுவேதுளதாம்புனல்வற்றியகால்
உடனுர்பவர்கைப் பொருளோயிலொனெவண்
நெடுமெய்யுணர்நெஞ் சுறினெங்குலகே.

அதாவது, இளமைப்பருவம் நீங்கிய பின்பு காமவிகாரங்கள் ஒருவரைப்பாதிக்கவல்லவாமோ? தண்ணீர் வற்றிப் போனபின்பு தடாகமென்பதுண்டாகுமோ? உருவழிந்து போகுமன்றோ? கைப்பொருளிழந்து வலுமையடைந்த காலத்தில் புத்திர மித்திரகளத்திர தாசீ தாசாதி பரிசனங்கள் உன்னைத் தொடர்ந்துநிற்பார்களா? நிற்கமாட்டார்களன்றோ? அதுபோலவே பரமாத்ம பரிஜ்ஞானமானது ஒருவர்க்குச் சற்குருபதேசத்தாலே

உண்டான காலத்தில் அகங்காராதிப் பிரபஞ்சங்கள் நிலைநிற்குமோ? முத்தனுதலினுலே சம்சாரநாசமுண்டாகும்—என்றபடி.

இவ்வாறு இவ்வான்மஞானத்தைச் சிறப்பித்தப்பின்னர் அதனாலடையக் கூடிய ஆன்மானந்தத்தின் பெருமையை உணர்த்து கின்றார். இளமையும் செல்வமும் பந்துவர்க்கங்களும் நிலையில்லாமல் மின்னலைப் போலத்தோன்றி யழிந்து போவன. ஆன்மானந்தமோ அழிவில்லாமல் நித்தியமாயிருப்பது ஆதலின் இப்படி அநித்தியமாய் அழிந்து போகக்கூடிய பேறுகளைப் பெற்றுள்ளோமென்று அவிவேகத்தினல் அகங்கரியாமல் நித்தியமாய் அசஞ்சலமாயுள்ள மோக்ஷானந்தத்தை மெய்யறிவினலே பெற்றுக்கொள்கவென்று அடுத்தசெய்யுளில் போதிக்கின்றார். அது எப்படி யென்னில்,—

12. திருவாலுறவாலெழிலான் மகிழேல்
வருகாலமயின்றிடும்யாவையுமே
உருமாயையினுமுலகிதொருவா
அருமாபதமேபறிவாலுறவே.

அதாவது, செல்வத்தாலாயினும், புத்திரமித்திரகளத்திராதி பரிவாரஜனங்களாலாயினும், இளமையினலாயினும் கர்வமடையாதே. அவை யொன்றேனும் நிலையுள்ளனவல்ல. அவையனைத்தையும் காலமானது விழுங்கிவிடும். அதாவது காலவசத்தாலே அனைத்தும் அழிந்து போகும். ஆதலால், மாயாகாரியமாகிய இந்தப் பிரபஞ்சத்தை விவேகத்தினல் தெரிந்து நீக்கிச் சர்வ வியாபகமாகிய பரமாத்மஸ்வரூபத்தை விசாரத்தினலே யுணர்ந்து மோட்சானந்தத்தை யடைவாயாக.—என்றபடி.

கடைசியாக, ஆயுளானது வரவரக் குறுகின்றது. ஆசையானது நம்மை ஒருநாளும் அதற்கிணங்கும் வரையில் விடுவதில்லை. ஆதலின் இந்தச் சின்னாட் பலபிணிக்கிடனுகிய சிறுவாழ்வை வீணேபோக்கிக்கொள்ளாமல் ஆசைவேரகழ்ந்து பகவத் பத்திபண்ணி மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்கவென்று கூறுகின்றனர் அதெப்படி யென்னில்,—

13. "பகலாயிரவாய்ப்பனியாய்வெயிலாய்
வகையாவருமால்விளையாடிடல்போல்
நகுபோழ்ததுதானமதாயுள்செலும்
அகலாதொரவா வெனுமாசுகமே."

அதாவது, காலமானது பகலென்றும் இரவென்றும் பனியென்றும் வெயிலென்றும் பலபிரகாரமாகக் குழந்தைகள் விநோதமாக ராஜா மந்திரி முதலான வெறும் பெயர்களை வைத்துக்கொண்டு விளையாடுதல் போல மாறிமாறிவந்து விளையாடுகின்றது. ஆயுள் நாளுக்குநாள் செல்லுகின்றது. மேலேசொல்லிய காலஸ்வரூபங்களைச் செவ்வையாக ஆராய்ந்து தெரிந்துகொண்டபோதிலும் காற்றைப்போல ஸ்வரூபமில்லாமல் எங்கும் வியாபிக்கும் துராசையானது மனிதர்களைவிட்டு ஒருநாளும் நீங்காது என்றபடி.

ஆதலால், கோவிந்த நாமத்தையே பஜித்துக் கரையேறுவாய்:

"பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே"
கோவிந்தனையே குறியாய் குறியாய்
கோவிந்தனையே குணனின் மதியாய்!

* * *

என்று ஸ்ரீமத் ஸங்கராசாரிய ஸ்வாமிகள் கருணை மிகுதியால் உய்யும்வழி உபதேசித்தருளினர்.

எஸ். முத்து ஐயர், பி. எ.

உ

ஸரஸ்வத்யை நம: சாரதாம்பாள் துணை.

# GODWARD HO!

'Follow me"—Christ. "Dare to be wise"—Socrates. "Dare, and the world always yields"—Thackery.

# கடவுளை வழிபடுமின்!

"கானங்கடந்தகடவுளைநாடுமின்"—திருமூலதேவர்.

## திருப்படை யெழுச்சி—THE SACRED MARCH.

### பிரபஞ்சப்போர்—The Holy War.

(திருவாசகம்.)

I

ஞானவாளேந்தும்ஐயர் நாதப்பறைஅறைமின்;
[1]மானமாஏறும்ஐயர் மதிவெண்குடைகவிமின்;
ஆனநீற்றுக்கவசம் அடையப்புகுமின்கள்;
வானவூர்கொள்வோ’நா’ மாயப்படைவாராமே!

II

தொண்டர்காள் [2]தூசிசெல்லீர்; பத்தர்காள் சூழப்போகீர்;
ஒண்டிறல் யோகிகளே, [3]பேரணி உந்தீர்கள்;
திண்டிறல் சித்தர்களே, [4]கடைக்கூழை சென்மின்கள்;
அண்டர்நாடாள்வோ’நாம் அல்லற்படைவாராமே!

இந்தத் 'திருப்படை யெழுச்சி'யில் ஸ்ரீ. மணிவாசகப்பெருமானார் 'பிரபஞ்சப் போர்' புரியும் வகையைச் சொல்லி வற்புறுத்துகிறார். கடவுளைவழிபடப் பிரபஞ்சத்தோடு போர்புரிய வேண்டியதவசியமாதலின், ஸ்வானுபவச் செல்வரும், ஆசாரியசிரேஷ்டருமாக விளங்கும் அவர் வார்த்தைகளையே இவ் 'ஆனந்தத்தாய்மொழி'க்கு முன்னுரையாக விளங்க எடுத்துக்கொண்டோம். மேற்கூறிய இருபாக்களின் கருத்து என்னவெனில்:—ஞானமாகிய வாளேந்தி விளங்கும் குருநாதரின் கிருபாகடாக்ஷ சின்னமாகிய 'நாதத்தை'ப் பரிசுத்த ஹிருதயத்வாரா கிளப்புங்கள். இதுவே நாதப்பறை யறைவித்தலாம். பிரபஞ்சப்போர் புரிவதற்கு வேண்டிய முதல் முஸ்தீபு இது: குருகடாக்ஷமின்றி பிரபஞ்சத்தை யெதிர்த்து வெல்லல் முடியாது. 2-வது: 'மானமா' அதாவது 'வான்புரவி' அல்லது 'துரியப்பரி'யேறும் (துரியத்தில் தோன்றும்) பரமகுருவை யறியும் 'வெண்மதி' யாகிய (சுத்த ஸாத்விகக்) குடை நிழற்றுங்கள். இந்த "வெண்கொற்றக் குடை நீழ"லின்றி இறைவனும் அவர் வெளித்தோன்றார். (சுத்த ஸாத்விகமாம்) நல்லறிவு இன்றி உலகத்தை யெதிர்த்து வெல்லல் கூடாதானபடியால், 'வெண்குடை கவிக்கும்' இந்தச் சின்னமும் அவசியமாம். 3-வது, 'ஆனநீற்றுக்கவசம்'—அதாவது, இந்திரியங்களால்

1. மானமா—the same as 'வான்புரவி'—'துரியப்பரி'
2. தூசி—முன்னணிப்படை.
3. பெரும்படை வகுப்பைச் செலுத்துங்கள்.
4. பின்னணிப் படையாக.

போஷிக்கப்படும் காமக் குரோத லோப மோக மத மாச்சரியம்—ஆகிய, உட்பகைகள் ஆறையும், *ஷட்விகார, †ஷட்கோசங்களையும் ஞானத்தீயினால் பொசுக்கி நீறாக்கி, இப்படியான திருவெண்ணீற்றுப் பூச்சையே 'கவசமாக'—போர்க்களத்தில் வந்தெய்தும் ஆயுதங்களால் ஆபத் நேராதபடிகாக்கும் வலிமைவாய்ந்த போர்வையாகக்கொண்டு, அதனால் உடம்பு முழுமையும் போர்த்துக்கொள்ளுங்கள். (சாம்பலாண்டி வெளி வேஷத்தினால் மட்டும் பிரயோஜனமில்லை.) இவ்வித முஸ்தீபுக்களோடு போர்புரியத் 'திருப்படையெழுச்சி' செய்வோமாயின், மாயமாகிய படைகள் வந்து நலியாமல் (மாரனையும்) வென்று, 'வானவூர்'—அதாவது சிதாகாயமாகிய முத்தியுலகைக் கைக்கொள்வோம்—இது திண்ணம். இப்படியாக, முத்தியுலகைக் கைக்கொள்ள, ஆயத்தமாய் நிற்கும் பக்தி வைராகிகளாம் போர்வீரர்களை இரண்டாவது பாட்டில் அணிவகுத்துச் செலுத்து முறை காட்டுகிறார்.

"மந்திரத்தில் மாங்காய்விழாது" என்று சொல்லும் உலகவழக்கைப்போல் 'தந்தனப் பாட்டினாலும் அஞ்சனக் கூத்தினாலும்' முத்திவீடு கிட்டாதாகையால், நமது சேனைகளை வெகு உஷாரோடும் பாரதூர யோசனையோடும் அணிவகுத்து முன்பின் ஒழுங்கு தவறித் தடுமாறாமலும், சைன்யபலம் வீணாகச் சிதைவுறாமலும், முறைப்படி சேனைகளைப்பழக்கிச் சரியாக அணிவகுத்துச் செலுத்தவேண்டும். அது எப்படியென்றால், சொல்கிறார் கேளுங்கள்:—'தொண்டர்காள் தூசி செல்லீர்'—தொண்டர்களே நீங்கள் முன்னணிப் படையாகச் செல்லுங்கள்.—அதாவது, தொண்டுசெய்தல், பரோபகாரம் செய்தல் (ஊருக்குழைத்தல்) முன்னணியாகச் செல்லல்வேண்டும்: தொண்டு செய்வாரைப்போல் தீரர்கள் வேறு யாருமில்லை: நிஷ்காம்யகர்மமே மோக்ஷசாதனங்கள் எல்லாவற்றிலும் தலையான முதற்படையாம். (நிஷ்காம்யகர்மம் செய்யாது 'முத்திநெறி யறியாத மூர்க்கர்' சொல்லுமாறு 'மூக்கைப்பிடித்து, நாக்கைப் பிடுங்கிக்கொண்டு' பிராணனை வதைப்பதால் பிரயோஜனம் இல்லை.) ஆகையால் இதையே உருவகப்படுத்தி, நிஷ்காம்ய கர்மிகளாம் தொண்டர்களை முன்னணியாகச் செல்ல வைத்தார். இப்பிரபஞ்சத்தில் நன்மையினும் தீமையே மலிந்துகிடப்பதால் நிஷ்காம்யகர்மசிந்தை தன்மட்டில் உலகவாஞ்சையை யெதிர்த்து வெல்ல ஆற்றலாது. ஆகையால் அதற்கு உபபலமாக பக்தி வேண்டும். பகவானிடத்தில் பக்தியில்லாவிடில் எவ்வளவு தர்மசிந்தையுள்ளவர்களும் ஒவ்வோர் சமயத்தில் தம் நிலைகுலைந்து தடுமாறிப் போவார்கள். ஆகையால் பக்திநிறைந்த சிந்தை இந்த தர்மசிந்தைக்குப் பக்கபலமாக இருத்தல்வேண்டும். இதையுருவகப்படுத்தியே 'பத்தர்காள் சூழப்போகீர்' அதாவது சூழச்செல்லுங்கள் என்றார். இப்படி பக்திசிரத்தையால் வலுவேறின தர்மசிந்தையினால் செய்யப்பட்ட நிஷ்காம்ய கர்மங்களினால் உண்டாகித் திரண்டு நிறைந்தமனோசக்திகளைச் செலுத்தப் படைத்தலைவர் வேண்டும். இல்லையேல் சைனியம் சிதறுண்டு சின்னாபின்னம் விளைக்கும். ஆகையால், ஏகாக்கிராந்த சக்தியால் ஒளிவிட்டுப்பிரகாசிக்கச் செய்யும் யோகசாதனங்களால் இவைகளையடக்கி ஒருவழிப்படுத்தப்பழக்கி நடத்தவேண்டுவதினவசியம்பற்றி "ஒண்டி

* ஆறுவிகாரங்கள்: இவை–பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகுதல், நசித்தல்.–கருப்போபநிஷத்தும் வராகோபநிஷத் முதலத்தியாயமும்பார்க்க.

† ஆறுகோசங்கள்: இவை–தோல், உதிரம், மாம்சம், கொழுப்பு, ஊன், எலும்பு.–வராகோபநிஷத் முதலத்தியாயம் பார்க்க.

றல் யோகிகளே பேரணியுந்தீர்கள்"—அதாவது, ஒளிவலிபெற்ற யோகசாதன முறைகளால் பல்கிப்பெருகிய இம்மனோசக்திகளை ஒருவழிப்படுத்துங்கள், என்று சொல்லாமற் சொல்லுவான, 'யோகிகளே, இப்பெரும்படைவகுப்பைச் செலுத்துங்கள்' என்று உருவகமாகக் கூறினார். இதனால் கைகூடும் சித்திகளைக் கண்டு மயங்கி, பிரபஞ்சப்போரில் இடையே கைசளைத்து நில்லாதபடி, பின்புறமாய் ஒருவரும் திருப்படையைத்தாக்காதபடி, அதாவது, வென்று விட்ட பகைவர்களால் இடையே சரீரத்துக்காவது மனதுக்காவது இடையூறு விளைந்து 'வெண்ணெய் திரண்டு வருகையில் தாழியுடைந்தாற்போல்' முத்தியுலகு சித்திக்குமுன்னே சரீரம் விழுந்து போகாமற் காத்துக்கொள்ள, இந்த சித்திகளைப் பின்னணிப்படையாகச் செல்லவைத்து, "திண்டிறல் சித்தர்களே கடைக்கூழை சென்மின்கள்" என்றார். அதாவது சரீரமனோதிடன்களையளிக்கும் யோகசித்திகள் முத்திபெறுமுன் தேகம் விழுந்து போகாதபடி காப்பதற்குப் பின்னணிப்படையாக, (ஜயித்துவிட்டநாடுகளிற் கலகம்நேராதபடி பார்த்துவர) "கடைக்கூழை சென்மின்கள்" என்று உருவகமரபால் மொழிந்தார்.

"தேகம் நானல்ல, மனம்நானல்ல" என்று துணிந்து விட்டவனுக்கு இவைகளைப்பாதுகாக்க சித்திகள் வேண்டுவதேன் என்றால், முத்திபெற்றுய்யும் வரையில் பரிசுத்தமான தேகமனோசாதனம் அவசியமாம். "பண்டுமுளைப்பதரிசியே யானாலும் விண்டுமி போனால் முளையாதாம்" என்றார்; அதுபோல், ஆத்மா தன்னாலேயே தன்னையறிந்துய்வது நிஜமானாலும், மனதாலுண்டான பிரபஞ்சத்தை மனதைக்கொண்டேதான் நீக்கிவெல்லுதல்வேண்டும். தேகதிடனில்லாவிட்டால் மனோதிடனில்லையாலும், மனோதிடனில்லாவிடத்து தேகதிடனில்லையாலும், மனதும் தேகமும் இரண்டாகவின்றி ஒளியும் விளக்கும்போல் ஒன்றுபட்டிருப்பதாலும் அவற்றை முறையே பரிசுத்தமாகவைத்துக்காப்பாற்ற வேண்டியதவசியமே. "ஜீவன்முத்திபெற்றுச் சகத்தோடிருந்தாலும்" விதேகமுத்தியடையும் வரையில் தேகமனோபரிசுத்தம் அவசியமே. அப்படிக்கின்றி ஏதேனும் மாசுமறுவுண்டானால், ஆத்மப்பிரகாசம் மங்கிவிடும். ஆத்மதரிசனமுண்டாகி ஸ்வரூபானந்தப்ராப்தி பெற்றவர்கள், இமைப்பொழுதும் அவ்வாத்மப்பிரகாசங் குறையக்காணப் பொறுக்கார். ஜாக்ர, ஸ்வப்ன, சுழுத்தியாதியெல்லா அவஸ்தைகளிலும் அவர் 'தெரியவரிய பரஞ்சோதி' வெளியிலே தங்கியிருக்க விரும்புவார். இதற்கு உதாரணமாக, நம் கண்ணின் கருமணியிலும் மேலான குருமணியாம் ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் தாம் தடுத்தாட்கொள்ளப்பட்டுத் திருத்தொண்டராய் வெகுகாலம் உழைத்துத்தில்லையடைந்து ஓய்ந்தொழிந்துட்கார்ந்து கனகசபைமுன் நடராஜாதரிசனமும், அவர் துதியும், தியானமும், சதாநிஷ்டையுமன்றி வேறு சிந்தனையின்றி யிருந்தபோதுங்கூட 'விதேகமுத்தி'யை விரும்பிப் பின்வருமாறு அழுதரற்றி "ஆனந்தமாலை"பாடி. என்னையனுக்கு, அத்தனுக்கு அண்ணலுக்கு, 'தாயாய்வந்து முலையைத்தந்து' தாரமாய்வந்தென்னையன்பாலாண்டு, தரையில்விட்டு விளையாட்டுக்காட்டித் தனையராய்நின்று வேடிக்கை பார்க்குமென் கண்மணிக்குக், காதலிக்கு ஆர்வ நிறைந்த அன்பனுக்கு, ஆதித்தாயாம் ஆனந்தவல்லிக்கு,—தர்மாம்பிகை, தர்மஸம்வர்த்தனி, திரிபுரசுந்தரி, லோகநாயகியெனப் பலநாமங்களா லென்னுள்ளத்துறைந்து விளங்கும் பரதேவதைக்கு, என்னம்மணிக்கு, ஈசுவரிக்கு,—அடியேன் படுந்துயர்பொறுக்காது ஏழைக்கிரங்கி ஏழைமுகம்பார்த்தென்னைபழைத்து ஸ்ரீ அகண்டானந்தவெகூஷிய தேசிக மூர்த்தியாய்வந்தாறுதல்

கூறி, யோகமுறையோதி நாதமுடிவெய்தச்செய்த, நாதாந்த வேதாந்த போதாந்தப்பரம் பொருளுக்கர்ப்பணஞ் செய்தார். அதையுமிதன்பின்னே வரைந்துளோம். ஆகையால், உலகத்தார் பேய்வாழ்வைநம்பிப் பெருவாழ்வையிழந்துபழிக்காது இல்லறத்திருந்தபடிநல்லறஞ்செய்து அகத்தூய்மையெய்தி, ஆர்வநிறைந்து, உண்மைவழிப்பட்டு உலகுக்குபகாரஞ்செய்துய்யுமாறு கடவுளை வழிபடுமின்! கடவுளை வழிபடுமின்! கடவுளை வழிபடுமின்! —என்றென்றுய்த் திருவருள் நோக்கால் அவள் நாதப்பறை யறைந்ததைக்கேட்டு, உலகுக் கிதைவெளியிட்டேன், வெளியிட்டேன்! ஈதவளாணை! வேறொருநோக்கமுங் கொண்டிலேன். இது ஸத்யம், ஸத்யம், முக்காலும் எக்காலும் ஸத்யம். ஓம் தத்ஸத்.

"பால்நினைந்தூட்டும் தாயினுஞ்சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினையுருக்கி உள்ளொளிபெருக்கி
[1]உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச்சொரிந்து புறம்புறந்திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத்தொடர்ந்து சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந் தருளுவதினியே."

"புன்புலால்யாக்கை [2]புரைபுரைகனியப்
பொன்னெடுங் கோயிலாப்புகுந்தென்
என்பெலாமுருக்கி எளியையாய்ஆண்ட
ஈசனே மாசிலாமணியே
துன்பமேபிறப்பே இறப்பொடுமயக்காம்
[3]தொடக்கெலா மறுத்தநற்சோதி
இன்பமேயுன்னைச் சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந் தருளுவதினியே."

1. கெடுதலில்லாத.

2. உட்டுளைகள் தோறும் கனிய.

3. பற்றுக்களெல்லாவற்றையும் அறுத்தருளின.

"ஸத்யம்வத."

## சத்தியானந்த சபை.

ஓம் தத் ஸத்.

ஆனந்த நடேசாய நமஃ

நடேச, நடேசானந்தநடேச!
அநாதரக்ஷக, ஆபத்பாந்தவ!
இன்னுயிர்த்தோழ, இன்பருள்நாத!
சின்மயானந்த, சிவகாமிநேச!
குருமூர்த்தசுந்தர, குஞ்சிதபாத!
சடைவிரிகோல, சாம்பவிநாத!
அம்பிகைபங்க, அன்பர்க்கன்ப!
என்பேயுருக, அன்பருள்நாத!
அன்பேயுளித் தெனையாட்கொள்ளீச!
அபயம், அபயம்! ஆண்டவ அபயம்!
தாண்டவ அபயம்! தனிமுதல் அபயம்!
தயாநிதி அபயம்! தாயுமே அபயம்!
ஜயஜய அபயம்! அபயம் ஜயஜய!

# ஜயபேரிகை முழக்கம்.

## சபாபதி நடனம்.

"இதந்தருமடந்தை யொடிசைந்து யிருடம்புபோல்
விதம்படுலகங்களின் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடுதுந்துமி விளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழலிறைஞ்சுவாம்."

(தத்துவராயர்பாடல்துறை.)

### காளம்.

1. அன்னியமில்லையென் றாதேடாகாளம்
ஆனந்தமானோமென் றாதேடாகாளம்
துன்னுசுடரேயென் றாதேடாகாளம்
சோதியுட்சோதியென் றாதேடாகாளம்.

2. பிறவிகழிந்ததென் றாதேடாகாளம்
பேதைமைதீர்ந்ததென் றாதேடாகாளம்
அறிவேவடிவென் றாதேடாகாளம்
அறியாமைபோனதென் றாதேடாகாளம்.

3. கோசங்குலைந்ததென் றாதேடாகாளம்
கூடறிவானதென் றாதேடாகாளம்
பாசம்பறந்ததென் றாதேடாகாளம்
பரமேபரமமென் றாதேடாகாளம்.

4. பற்றற்றுநின்றோமென் றாதேடாகாளம்
பார்ப்பறப்பார்த்தோமென் றாதேடாகாளம்
முற்றவுணர்வென் றாதேடாகாளம்
உள்ளொளியானோமென் றாதேடாகாளம்.

5. உள்ளதுபோதமென் றாதேடாகாளம்
உலகம்ஒக்காளமென் றாதேடாகாளம்
வெள்ளவெளியீதென் றாதேடாகாளம்
வேதஞ்சொன்னவண்ண மூதேடாகாளம்.

6. ஊனேமறிவதென் றாதேடாகாளம்
உணர்வேபிரமமென் றாதேடாகாளம்
நானேயவனுமென் றாதேடாகாளம்
நானுவதில்லையென் றாதேடாகாளம்.

7. உண்மைவடிவேயென் றாதேடாகாளம்
உட்புறம்பில்லையென் றாதேடாகாளம்
திண்மையறிவேயென் றாதேடாகாளம்
திசைதிசைதோறுநின் றாதேடாகாளம்.

8. சாதிகழிந்ததென் றாதேடாகாளம்
சங்கைதவிர்ந்ததென் றாதேடாகாளம்
சோதிசுகமேயென் றாதேடாகாளம்
சொல்லவொண்ணாததென் றாதேடாகாளம்.

### ஊர்.

1. நான்முகனுக் கிடமானவூர் எங்களூர்
நான்மறையுந் துதி செய்யுமூர் எங்களூர்
தேவுக்குந்தேவாய் இருக்குமூர் எங்களூர்
தேவர்களன்றித் திரியுமூர் எங்களூர்.

2. தோற்றரவாகத் துணிந்தவூர் எங்களூர்
சோகமோகங்கள் துறந்தவூர் எங்களூர்
ஆற்றலுடையார்க் கடைந்தவூர் எங்களூர்
ஆனந்தமாயே இருக்குமூர் எங்களூர்.

3. காமக்குரோதங் கழிந்தவூர் எங்களூர்
கல்விக்கடலைக் கழிந்தவூர் எங்களூர்
நாமரூபங்கள் தவிர்ந்தவூர் எங்களூர்
ஞானமேயாக நவின்றவூர் எங்களூர்.

4. அறிவிட்டறியாமை போக்குமூர் எங்களூர்
அன்னியமொன்று மிலாதவூர் எங்களூர்
குறியிட்டிதென்ன வொண்ணாதவூர் எங்களூர்
கோசங்களைந்துங் குலைந்தவூர் எங்களூர்.

5. புத்திவிகற்ப மறுக்குமூர் எங்களூர்
பூரணபோதமே யானவூர் எங்களூர்
வித்தும்விளைவு மிலாதவூர் எங்களூர்
விண்முதற்பூதம் விளைந்தவூர் எங்களூர்.

6. எட்டுத்திசையு நிறைந்தவூர் எங்களூர்
ஏகாந்தமாகி யிருக்குமூர் எங்களூர்
தட்டற்றயோகிகள் தங்குமூர் எங்களூர்
தன்மபாவங்கள் தவிர்ந்தவூர் எங்களூர்.

7. உலகத்தையெல்லா மொறுக்குமூர் எங்களூர்
உண்மையொன்றாகி யொன்றானவூர் எங்களூர்
சிலுகற்ற சிற்பரமானவூர் எங்களூர்
சிந்தனைவிட்டுத் தெளிந்தவூர் எங்களூர்.

8. உன்னப்படாவுணர்வானவூர் எங்களூர்
உள்ளொளியாகியிருக்குமூர் எங்களூர்
கண்ணுக்கணித்தாயிருக்குமூர் எங்களூர்
கள்ளப்புலனைக்கழித்தவூர் எங்களூர்.

9. கதிருஞ்சிலுகு மிலாதவூர் எங்களூர்
காண்டாலுங்காட்சியுமற்றவூர் எங்களூர்
சுத்தவெளியிலே தோன்றுமூர் எங்களூர்
சோம்பர்சுகமென்றுணர்ந்தவூர் எங்களூர்.

ஓம் தத் ஸத்.

உ

கடவுளை வழிபடுமின்!

## ஆனந்தமாலை—THE GARLAND OF RAPTURE.

(திருவாசகம்)

என்னாலறியாப் பதந்தந்தாய்,
யான் அதறியாதேகெட்டேன்;
உன்னாலொன்றுங் குறைவில்லை,
உடையாய், அடிமைக் கார்என்பேன்.
பன்னாளுன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா
தென்னாயகமே! பிற்பட்டிங்
கிருந்தேன்நோய்க்கு விருந்தாயே!

சீலமின்றி நோன்பின்றிச்
செறிவேயின்றி அறிவின்றித்
தோலின்பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்றுவிழுந்து கிடப்பேனை
* மாலுங்காட்டி வழிகாட்டி
† வாராஉலக நெறியேற
கோலங்காட்டி ஆண்டானைக்
கொடியேன் என்றோ கூடுவதே!

கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்,
கேடிலாதாய் பழிகொண்டாய்;
படுவேன் படுவதெல்லாநான்
பட்டாற் பின்னைப் பயனென்னே?
கொடுமா நரகத்தழுந்தாமே
காத்தாட்கொள்ளுங் குருமணியே!
நடுவாய்நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கணாயகமே?

தாயாய் முலையைத் தருவானே!
தாராதொழிந்தாற் சவலையாய்
நாயேன்கழிந்து போவேனோ?
நம்பி! இனித்தானல்குதியே.
தாயே என்றுன்றாள் அடைந்தேன்
தயாநீ என்பாலில்லையே
‡ நாயேனடிமை யுடனாக
ஆண்டாய் நான்றான் வேண்டாவோ?

கோவே! அருள வேண்டாவோ?
கொடியேன் கெடவே அமையுமே,
ஆவா என்னாவிடில் என்னை
அஞ்சேல் என்பார் ஆரோதான்?
சாவார் எல்லாம் என்னளவோ?
தக்க வாறன் றென்னாரோ?
தேவே! தில்லை நடமாடி!
திகைத்தேன் இனித்தான்தேற்றாயே!

நரியைக் குதிரைப் பரியாக்கி,
ஞாலமெல்லா நிகழ்வித்து,
பெரிய தென்னன் மதுரை யெல்லாம்
§ பிச்சதேற்றும் பெருந்துறையாய்!
அரியபொருளே! அவநாசி
அப்பா! பாண்டி வெள்ளமே!
தெரியவரிய பரஞ்சோதி!
செய்வதொன்றும் அறியேனே!

## அத்தனருள்—The Father's Converting Grace

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம் $
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக்கருளியவா றார்பெறுவார் அச்சோவே!—திருவாசகம்.

* மால்—பெருமை, விருப்பம்.
† மீளாவுலகில் முறையே ஏற.
‡ நாயேன் அடிமைத்திறம் உடனே நிகழும்படி ஆண்டருளினை, அடிமைத்திறமேயன்றி அடியேன் வேண்டாவோ?
§ பித்தேறச் செய்யும்.
$ விட்டோடும்படி.

# FORE-WORD.

IN one of the numerous clusters of villages that go to make up this straggling city of Madras, there lived a remarkable lady, one of that rare and ancient type of Aryan womanhood, who by her own efforts had lifted herself up above the troubles and turmoils of this mundane life. Twenty years ago when the present writer first came to Madras fresh from college full of faith and hope, his mind cherishing high ideals of life, he felt a natural attraction which has continued to the last, for this great lady, now of blessed memory, who by her calmness, intelligence and unlimited capacity for happiness under all and every circumstance of life, not excepting death itself, has shed a lustre on his life and silently influenced it to an extent, little known or suspected by the world. Long and various were the the discussions the writer held with her on diverse topics—from female education to widow-marriage and the philosophy of sex to the *summum bonum* of life itself. On all these subjects she was ready to speak, to discuss, to persuade if need be, but her talks were more oracular than argumentative; she seemed to look at things direct and speak, as if she has seen them through to the end. She spoke the truth always and at any cost and had in her the artlessness and simplicity of a child; so that it was always a pleasure to sit by and hear her talk on things mundane and celestial or the problems concerning the life beyond.

At that stage of development of the writer it was impossible for him to understand fully the noble and perfect character of her unique personality: but later on he had the rare good fortune to sit at her feet as a true disciple and imbibe spiritual truths from her, which as they were truly received and assimilated began to fructify and produce results that wholly changed his life, and opened before his wondering gaze, scenes and visions of a noble and perfect life that our ancient Rishis have rapturously sung in so many rhapsodies which we call *Upanishads.*

At this crisis in our national career, at a time when the contending forces of two great civilizations seem to rend asunder all old ideals and established ways of social and religious progress, She that "long ago reconciled the two worlds and has made them one" seemed to have come (to him) as an *avatar* of the great and all existing One in female form clothed, to set at rest the contending forces by setting them in *right* relationship to each other, and make them work in harmony as complements of one another,—working together for the strengthening of each other and uplifting of humanity as a whole;—instead of each striving against and weakening the other and destroying the eternal spiritual ideal, by clinging to which alone can humanity ever hope to rise to its destined goal—the ultimate realisation of the Universal Principle and oneness of life, which is *Life Eternal.*

In the language of "New Science"* this great soul that has realised the eternal Oneness of all that exist as "*Akhandakaram*" was, as it were, an embodiment of "the anabolic or constructive element" as the old "feminine creative maternal principle" is called. Her mission in life seemed to be to construct, to unify, to harmonise. And this she had done splendidly in her own life; and by her simple yet grand teaching of Truth Absolute in such a way as to make it a living reality to herself and to those who sat at her feet as *true chelas*, she has helped others to reconstruct their life in complete harmony with the Universe and so revivify it with the *light* of Truth as to attain for themselves that great spiritual blessing which is beautifully called "Re-birth" or "Regeneration."

Her teachings partook more of the nature of effusions than studied sermons. She was truly and in every sense a Mother, a divine and holy Mother to those who sat at her feet with pure hearts and parched up souls that panted after the holy river of Truth. And her method of teaching the Truth, Oh! it was simply perfect and natural. Her language and illustrations were simple and homely, though necessarily symbolical. Mystery and mysteriousness she ever denounced, and freely and openly spoke the truth to all that came to her, so much so that her frank & open nature combined with the sublime truths that fell from her lips, made her liable to be easily misunderstood by many; and as she ever dwelt on her own high altitude of spiritual perfection caring nought for praise or blame of men, except to help seekers after Truth and that only those who sought it in right earnest, she had more than her share of obloquy, ridicule and what not, and enjoyed the reputation of being the best abused and most misunderstood person of her time. But these were nothing to her. She was *ever at one* with her Maker—"*Akhandakaram*" as she would say; and the "Bliss of indivisible Union"—"*Akhandanandam*"—was hers to the last. She used often to say that the Vedanta

* *Vide* article on "The Eternal Motherhood" by Mrs. Frances Swiney, published in the "East & West" for November 1902. (Bombay.) Also, *The Evolution of Sex*, Geddes & Thomson, p. 26.

philosophy had come to be in bad repute with many good souls, because its teachers adopted the old harsh method of trying the young and inexperienced soul that came seeking after Truth, with a stern, severe, and ascetic discipline, from which all but the most hardened souls cannot but shrink away as impossible to bear; thus spreading the false notion that Truth is unreachable by the ordinary man who has perforce to live in the world and follow some profession for his livelihood, though he has cut himself off from the shackles of the world in his heart of hearts. She preached "purity of heart" and nobility of aspiration to reach the highest truth,—nothing short of Truth absolute,—as the two essential requisites for realising the higher life; and provided a man or woman has in his or her evolution of life attained to this stage, he or she need not give up family life or following a profession merely as a means of livelihood. On the other hand, a truly aspiring soul and reflecting mind will make use of these experiences of every day life to build up a true and noble character based on the essential truth of things and not their apparent reality. She used often to insist on the necessity of stricter observance of the great and universal principle of teaching, *viz.*,—"that children should be taught by love and kindness and not by fear and rudeness." And she regularly followed it in teaching the highest truth to *her* children, who though they were men of note and official or social position in the world—some of them being distinguished University graduates of standing—were yet to her but *children*; and a happy *Kindergarten* it was where these learned to imbibe gradually the highest truth, by living the life, under the watchful guidance of a true Mother's loving care. It was indeed a life of paradise to the few that were intimately attached to her—not as *'Guru-Shishya'*, she ever discarded this idea as smelling of old-world harshness and wanton asceticism;—but as— Mother and child—a true spiritual bond, that her dropping the flesh has only strengthened the more.

An exposition or effusion as you please, of Her teachings to one of Her children, as realised by him in actual experience, is now presented to all ripe souls and real lovers of Truth, with the thrilling *Voice* that suddenly broke on his ears and made his heartstrings vibrate, still ringing within him—"GODWARD HO!"

In the title chosen to designate this effusion of grace,— "The Gospel of the Holy Mother",—"the Holy Mother" represents more "the anabolic principle" of Eternal Motherhood than anything of It in name or form. Of the nine sections into which the book is divided, all but the last were read to and approved of by Her while She was still in the flesh; and the last bears the *imprimatur* of Her divine grace and blessing to Her child, which however it may appear to the worldly-minded, is intensely real to the spiritually "thirsty and hungry" soul that panteth after God, "as the hart panteth after the brook." The universality of this spirtual experiece wlll be evident from what Professor James of the Harvard University quotes in his masterly volume of Gifford Lectures on Natural Religion entitled "The Varieties of Religious Experience:"—* "The influence of the Holy Spirit exquisitely called the Comforter, is a matter of actual experience, as solid a reality as that of electro-magnetism." †—adding his own opinion that it "*is literally and objectively true as far as it goes.*"

ANANDA MISSION,
Anandashrama, Triplicane,
*Vijayadasami*, 1st Octr., 1903.

S. S.

* See p. 515, and footnote. † W. C, Brownell in *Scribner's Magazine.*, vol. xxx. p. 112.

## திருமூலதேவர் திருமந்திரம்.

"அஞ்சுமடக்கடக் கென்பரறிவிலார்
அஞ்சுமடக்கு மமரருமங்கில்லை
அஞ்சுமடக்கி லசேதனமாமென்றிட்
டஞ்சுமடக்கா அறிவறிந்தேனே."

"கைவிடலாவ தொன்றில்லை கருத்தினு
ளெய்தியவனை யிசையினலேத்துமின்
ஐவருடைய அவாவினிற் றேன்றியே
பொய்வருடைய புலன்களுமைந்தே."

"பெருக்கப்பிதற்றிலென்பேய்த்தேர்நினைந்தென்
விரித்தபொருட்கெல்லாம்வித்தாவதுள்ளம்
பெருக்கிற்பெருக்குஞ் சுருக்கிற்சுருங்கு
மருத்தமு மத்தனை யாய்ந்துகொள்வார்க்கே."

"ஆனசமயமதுவிது நன்றெனு
மாயமனிதர் மயக்கமது வொழி
கானங்கடந்த கடவுளை நாடுமின்
ஊனங்கடந்த உருவது வாமே."

# *விவேகரஸத்தாலாட்டு.

சங்கராபரணம். ஆதிதாளம்.

1. வாவாவென் வாழ்வரசே
 மங்களமாய் வாவாவா
தேவாதி தேவனருள்
 செய்திடுவார் வாவாவா.

2. மாலாம் வறுமையினால்
 வருத்தம்வந்த நாளையிலே
பாலோடு தேனமுதம்
 பருகவைத்த பாக்கியமோ.

3. செய்யாத் தபசுசெய்து
 தீர்த்தமெதுஞ் சென்றாடிக்
கையேந்தி நின்றதற்குக்
 கடவுள்தந்த கற்பகமோ.

4. சிறந்ததொரு வானதிலே
 தேசளிக்குஞ் சந்திரனோ
பிறந்தகுடி காத்தெனக்குப்
 பேறளித்த நாயகமோ.

5. வண்டாடும் பூவோ
 மலரிலுள்ள வாசனையோ
கொண்டாடும் பூவரும்போ
 கோலமிகும் நற்கரும்போ.

6. தேனோ திரவியமோ
 தெள்ளமுதச் செஞ்சுவையோ
வானாகி யென்றனக்கு
 வாழ்வளித்த மாதவமோ.

7. கற்றகல்வி யன்புருவாய்க்
 கனிந்துநின்ற காட்சியிலே
பெற்றதொரு பூங்குருந்தோ
 பிணியறுக்கும் நன்மருந்தோ.

8. அள்ளியிட்ட பொன்னினுக்கும்
 அடியிலிட்ட பூவினுக்கும்
பிள்ளைமிடி தீர்க்கவந்த
 பேரின்ப நாயகமோ.

9. பாலாறுந் தேனாறும்
 பாய்ந்தொழுகும் வேளையிலே
மேலான சீனியது
 மிகக்கலந்த நல்ரஸமோ.

10. மதியூக மந்திரியாய்
 வல்லவர்க்கும் வல்லவராய்
அதிகுண சுந்தரராய்
 ஆளவந்தார் பேரரசோ.

11. பொற்றென்ற அன்பினிலே
 பூட்டியென்னை மாலையிட்டுக்
கற்பினொடு கன்னிமையுங்
 கையேற்றார் பேரரசோ.

12. அறங்கிடந்த தொட்டிலிலே
 ஆய்ந்தறிந்து கானீட்டி
உறங்கியிடும் முன்னாலே
 ஓர்வசனஞ் சொல்வதுகேள்.

13. முன்னடையைச் சொல்வதுகேண்
 முறையாக நீநடக்க
என்னடையைச் சொல்வதுகேள்
 இசைவாக நீநடக்க

14. மாமதுரைப் பட்டணத்தே
 மாட்சியுள்ளா ளுன்பாட்டி
நாமமுடன் பெண்களிலே
 நாயகமாய் வாழ்ந்திருந்தாள்.

15. வன்பான மார்க்கமெதும்
 மனம்பதிய வொட்டாமல்
அன்பா யெனைவளர்த்தாள்
 ஆதரவா யுன்பாட்டி.

* Reprinted from the *Vivekachintamani*, Vol III No. 1, for may 1894.

16. கூட்டிவைத்து நற்குணமாய்க்
கொண்டாடி யாசையொடு
பாட்டும் படிப்புகளும்
பலகுணமுஞ் சொல்லிவைத்தாள்.

17. பொய்களவு நானறியேன்
பொல்லாப்பு நானறியேன்
மெய்குளிரும் வார்த்தையெல்லால்
வேறறியே னென்னரசே.

18. பாலோடு தேனைப்
பரந்தினிக்கு மென்வார்த்தை
மேலோர்சொல் வார்த்தையெல்லாம்
வேதமென்று கொண்டேனுன்.

19. தப்பின்றி யாவருக்குந்
தாபரமாய் நானடந்தேன்
உப்பிட்டா ரானாலும்
உள்ளளவும் நான்மறக்கேன்.

20. குதிரைக் கொருகாதம்
கொம்பினத்துக் கைங்காதம்
எதிர்பேசும் பெண்களுக்கோ
எட்டுலக்ஷங் காதமம்மா.

21. நற்குணரைக் கண்டாக்கால்
நமஸ்காரஞ் செய்திடுவேன்
துற்குணரைக் கண்டாக்கால்
தூரப்போ மென்கால்கள்.

22. உலகமெல்லா மென்வீடாம்
உடன்பிறப்போ வெவ்வெவரும்
கலகநிலை யேதுமில்லை
கருணைநிலை யென்றனிலை.

23. கண்போ லெனைவளர்த்துக்
காதல்வைத்த நாளையிலே
பெண்பேச வந்தார்கள்
பிரியமுட னுன்றனையா.

24. ஊரெல்லாஞ் சம்மதிக்கும்
உத்தமியாள் வேணுமென்றார்
பாரெல்லாஞ் சம்மதிக்கும்
பதிவிரதை வேணுமென்றார்.

25. சத்தியத்தி னுயகமாய்த்
தயவுதனிற் சாகரமாய்ப்
புத்தியுத்தி யுள்ளதொரு
பொற்கொடியாள் வேணுமென் [றார்.

26. வீட்டினுக்கு நல்விளக்கு
வெளிதனக்கு மாபரணம்
நாட்டிலுள்ள பெண்களுக்கு
நாயகந்தான் வேணுமென்றார்.

27. பொற்பிருந்தும் பூணிருந்தும்
போற்றுசுகந் தானிருந்தும்
கற்புநல மில்லாப்பெண்
காட்டுப்பே யாகுமென்றார்.

28. காட்டுக் குடித்தனமாய்க்
கனவறுமைப் பட்டாலும்
பாட்டும் படிப்புகளும்
பலகுணமும் வேணுமென்றார்.

29. ஆட்சியில்லை யானாலும்
அழகில்லை யானாலும்
மாட்சிபெற்ற வார்த்தையொடு
மதியூகம் வேணுமென்றார்.

30. வட்டிவட்டி யாய்ப்பொருள்தான்
வளம்பெருகி வந்தாலும்
செட்டுமட்டு மாய்த்தனத்தைச்
செலவுசெய்ய வேணுமென்றார்.

31. வையகத்திற் கேவலமாய்
மாட்சியற்று நின்றாலும்
கையிருக்க மாதுசொர்ணக்
களஞ்சியந்தா னென்றுரைத்தார்.

32. வரிசையொடு தன்வீட்டில்
வாழ்ந்திடும்பெண் ணானாலும்
புருஷனே தெய்வமென்றார்
போற்றியிடும் பெண்மணிக்கு.

33. கொள்ளைகொள்ளை யாய்க்கொணரக்
குவியலில்லை யானாலும்
பிள்ளைகளைத் தான்வளர்க்கும்
பேரறிவு போதுமென்றார்.

34. மதலைகளைப் பார்க்கவைத்து
வன்புதுன்பு சொன்னக்கால்
பதங்குலைந்து பின்வாழ்வு
பாழாகு மென்றறிந்து,

35. வாக்கடக்கிச் செய்கையொடு
மனசினையுந் தானடக்கித்
தாக்கியிடும் நற்கவனந்
தாபரிக்க வேணுமென்றார்.

36. வாலிபமுங் காயிதமும்
வாய்ந்தவுருக் காட்டுமென்று
மேலறிவாய்த் தான்வளர்க்க
வேணுமிக்க கல்வியென்றார்.

37. பணிவாகத் தெண்டனிட்டுப்
பர்த்தாவைப் பேணுமுறை
அணியாகக் கொண்டபெண்ணே
ஆசையென்றார் வேணுமென்றார்.

38. அளிகொண்ட மாலையிட்ட
அன்புடைய நாயகனார்
வெளிவேலை தீர்ந்தபின்பு
வீட்டில்வரும் வேளையிலே,

39. மதியிலே மந்திரியும்
மனத்தயவில் மாதாவும்
மதிபோற் குளிர்முகமும்
வார்த்தையிலே சீனியுமாய்,

40. வணங்கியுப சாரமுடன்
வந்தேற்றுக் கைகொடுத்தும்
இணங்கியிடும் வார்த்தைகளால்
இயல்புகளைத் தானறிந்தும்,

41. மாறாத் துயரமெல்லாம்
மாற்றிமண வாளனவன்
ஆறாத் துக்கமெல்லாம்
ஆற்றுமின்னாள் வேணுமென்றார்.

42. வெறிகொள்ள வீட்டினிலே
விபரீதம் மெத்தவரும்
பொறுமைநிலை பெண்மணிக்குப்
போற்றிய சிங்காசனமாம்,

43. பானைசுசி சட்டிசுசி
பாத்திரங்கள் வீடுசுசி
ஆனதொரு தன்றேகம்
அளவில்லா நல்லசுசி,

44. அத்தையார் பெற்றதள்ளை
அம்மானார் தன்றகப்பன்
பர்த்தாவி னூற்றோர்தன்
பந்துவென வெண்ணுமனம்,

45. உள்ளதொரு பெண்வேணும்
உள்ளதெல்லாந் தோற்றாலும்
கொள்ளுவது மேலுரைத்த
குலக்கொடியே யென்றுரைத்தா [ர்.

46. காட்டிற் பிணம்பிடுங்கிக்
கவளமிடும் பேய்களிலும்
வீட்டிலே சிற்சிலபேய்
வீம்பதிகஞ் செய்யுமென்றார்.

47. மறுநாட்டங் கொண்டுழைத்து
மாப்பிள்ளையை மாறடிச்
சிறுதேட்டந் தேடுகின்ற
ஜெகவஞ்சப் பேய்கள்சில.

48. அண்டையயற் சண்டைகளை
யாதரித்து மூட்டிவிட்டுக்
கொண்டைபிடி பார்த்துநிற்கும்
குண்டுணிப்பேய் சிற்சிலவே.

49. பானூற்றம் மாறாப்
பசலைகட்கு முன்னிருந்து
கானீட்டி வன்புதுன்பு
கற்கவைக்கும் பேய்கள்சில.

50. வக்கீல்கள் தோற்றிடவே
வாதமிட்டு மாப்பிள்ளையைச்
சக்கிலியக் கூத்தாட்டுஞ்
சகசண்டிப் பேய்கள்சில.

51. பூபார மாயிருந்து
பொன்பூட்டச் சண்டையிடும்
ஆபரணப் பேய்கள்சில
அதிமோசப் பேய்களிவை.

52. தாபரித்துப் பேய்களெல்லாம்
சார்ந்துமணஞ் செய்தாலும்
ஆபரணப் பேய்வேண்டாம்
அதுவேண்டாமென்றுரைத்தார்.

53. கடியநடை தானடந்துங்
கால்வலித்தும் வேறெவரும்
பிடியாம லென்னைவந்து
பேசிமணஞ் செய்தார்கள்.

54. நடையுடையும் பார்த்தார்கள்
நன்மதியும் பார்த்தார்கள்
தடையுண்டோ வென்றெனது
சகவாசம் பார்த்தார்கள்.

55. எல்லா மிசைவா
யிருக்குதென்று சம்மதமாய்
உல்லாச நெஞ்சுடனே
உன்றனையா கொண்டார்கள்.

56. என்குணத்தை நான்றுதித்தால்
இசைவா யிருக்காது
தன்குணத்தி னற்சாக்ஷி
ஜெகத்திலுள்ள மெய்க்கீர்த்தி.

57. ஆதலாற் கண்மணியே
அழகுமிகும் விண்மணியே
நீதியொடு நற்குணமும்
நீபெரிதா யெண்ணிநிற்பாய்.

58. இணையில்லா விவ்வுயிர்தான்
இவ்வுடலை விட்டாலும்
குணமே பெரியதென்று
கொண்டுநீ வாழ்ந்திடுவாய்.

59. தள்ளைநடை போனடப்பாய்
தக்கபேர் நீயெடுப்பாய்
பிள்ளையென்னும் பக்குவத்தே
பெருங்கீர்த்தி நீபடைப்பாய்.

60. வாலிபந்தா னென்றுசொல்லி
மாசுமறு செய்யாதே
பாலியந்தா னென்றுசொல்லிப்
பழிபழுது செய்யாதே.

61. பிஞ்சில் விளைவதுவே
பெரியமர மானபின்பும்
பிஞ்சிநிற்கும் வாசனையை
வேறுக்கக் கூடியதோ.

62. மட்டில்லா வுண்மையிது
மனதுதனில் நீதரிப்பாய்
தொட்டிற் பழக்கமதே
சுடுகாடு மட்டுமம்மா.

63. இதற்கோர் கதையுரைப்பேன்
இன்பமொடு கேட்டிடுவாய்:
பதியொன்று, பெண்ணொருத்தி,
பாங்காங் குழந்தையொன்று;

64. பழுதகன்ற வவ்வூரிற்
பாங்கான தோட்டமொன்று;
வழுதுணங்காய்த் தோட்டமதில்
வாலிபனும் போயிருப்பான்.

65. ஓயாத வாசையினால்
ஒருகாய் களவுசெய்தான்
தாயாரிடங் கொடுத்தான்
தன்செயலுந் தானுரைத்தான்.

66. பிள்ளைதிற முள்ளதென்று
பெருமகிழ்ச்சி கொண்டணைத்தாள்
தள்ளைமதி கேடலவோ
தன்சிசுவைக் கொல்லுவதும்.

67. இரண்டுகோ யாச்சுபின்னும்
எட்டுபத்து நூறுச்சு
மருண்டுநிற்குந் தீக்குணத்தை
மாற்றியிடக் கூடியதோ.

68. தள்ளை யிதுவிதமாய்த்
தன்மகனைத் தான்வளர்த்துப்
பள்ளியினில் வைத்திடவே
பாலன் படித்துவந்தான்.

69. கற்றான் பலதுறையுங்
கணக்குதனிற் றேர்ச்சிமிகப்
பெற்றா னரண்மனையில்
பெருங்கணக்கன் றன்னலுவல்.

70. பெருமை யருமைமிகப்
பிரதாபந் தானுமிக,
அரியதொரு சங்கதிதான்
அங்கே நடந்ததப்போ.

71. ராஜாத்தி, யாபேர்க்கும்
ஏற்றமுற்ற ராமாபாய்,
தேசார்ந்த பூங்கொடியாள்,
தேன்பழித்த நன்மொழியாள்,

72. நாளொன்றி னீராடி
நன்று யலங்கரித்து
மாளிகைக்குத் தான்றிரும்பி
வந்தாள் மனஞ்சலித்தாள்.

73. உத்தமியும் நீராட
வுத்தேச மாய்மறந்து
வைத்துவிட்டுப் போனாள்தன்
மதிப்பரிய தாழ்க்கோலை.

74. ஆணிகொண்ட கள்ளமதே
அரசன்முடி கொள்வதற்கும்
காணிகொண்ட கள்ளமதே
கனகோடிப் பொன்னினுக்கும்.

75. பழிபழுது வாலிபத்தே
பதிந்தா னிவிர்த்தியுண்டோ
வழுதுணங்காய்க் கள்ளமது
மாறவில்லை நாளாயும்.

76. கணக்கன் களவுசெய்தான்
கணிப்பரிய சொர்ணமெல்லாம்,
இணக்கியிடக் கூடியதோ
ராஜாத்திபொன்னலவோ.

77. சாக்ஷிகளை விஸ்தரித்தார்
தடவுதனி லேயடைத்தார்
மாட்சிகனங் குன்றியது
மகிமையெல்லாங் குன்றியது.

78. விரித்துநின்ற குற்றமிதை
மேலாக நிர்ணயித்துத்
துரைத்தனத்தா ரந்நாளில்
தூக்கிலிடச் சொன்னார்கள்.

79. தூக்கிலிடுந் தெண்டனையால்
துக்கித்தான் பாலகனும்
வாக்கினா லம்மறுக்கம்
வரையறுத்துக் கூறுவதோ.

80. கொலைசெய்ய எத்தனித்தோர்
குறிப்பாகக் கேட்டார்கள்:
'மலைத்துநிற்கும் பாலகனே
மனதிலுனக் கிஷ்டமெது?'

81. தருவதெது நீங்களிப்போ
தாயாரை யிங்கழைத்து
ஒருவார்த்தை பேசியிட
உத்தரவு தாருமென்றான்.

82. அப்படியே சம்மதித்தார்
அம்மைவந்தாளண்டயிலே
செப்பியிடுஞ் சங்கதிக்குச்
சென்றானே பாலகனும்.

83. தாயார்தன் காதிரண்டும்
சார்பாய்க் கடித்திழுத்தான்
பாயாத ரத்தநதி
பாய்ந்ததைப் பார்த்தோர்கள்,

84. உன்கருத்தி லிவ்வா
றுதித்ததென்ன சொல்லெனவே
முன்களவைத் தட்டாமல்
மோசமிவ்ள் செய்தாள்காண்.

85 மதிப்பாய்ப் புகழ்ந்துநின்றாள்
வழுதுணங்காய்க் கள்ளமதைத்
துதிப்பும் புகழுமப்போ
தூக்குங் கயிறுமிப்போ.

86. என்றுசொல்லி நொந்தழுதான்
ஏக்கமிகக் கொண்டழுதான்:
நின்றவர்கள் பார்த்தார்கள்
நெஞ்சயர்ந்து நின்றார்கள்.

87. தூக்குக் கயிறுகண்டான்
துக்கமெத்த மெத்தமெத்தத்
தாக்கியது நெஞ்சினிலே
சாற்றுவான் பாலகனும்.

88. சிறிய வழுதுணங்காய்
திறமென் றீர் தாயாரே
பெரிய வழுதுணங்காய்
பிடரியிலே யென்றழுதான்.

89. ஆதலாற் கண்மணியே
அழகுமிகும் விண்மணியே
காதலித்த கற்பகமே
கள்ளமெதுஞ் செய்யாதே.

90. கள்ளமெதுஞ் செய்யாதே
கபடேதுந் தீண்டாதே
எள்ளளவும் வஞ்சகத்தே
இச்சைவைத்துச் செல்லாதே,

91. களவுசெய்த கைகளுக்குக்
கனவிலங்கு பூட்டிடுவார்,
அளவில்லாத் துன்பமுண்டாம்
ஆற்றுதற்கு மாளாது.

92. பொய்சொன்ன வாயிற்
புழுப்புழுக்கு மென்னரசே
மெய்சொன்ன வாயில்
விளம்புவதுஞ் சீனியம்மா.

93. மதிகேடு செய்காலும்
மார்க்கமுண்டு தப்பியிடச்
சதிகேடு செய்யாதே
தங்கள்கண்ணி தங்களுக்கே.

94. வஞ்சித்தார் வாழார்
வழிப்பறித்தார் பாழாவார்.
பஞ்சான தேகமிது
பசுவா னொருவனுண்டு.

95. கச்சைகட்டிக் கூத்தாடிக்
கடைத்தெருவி லோடேந்திப்
பிச்சையெடுத் துண்டாலும்
பிறர் துயரஞ் செய்யாதே.

96. தணியாத கோபமுள்ளார்
தயக்கம்வந்து தாழ்வார்கள்
பணிவாய் நடப்பவர்க்கோ
பாரெல்லாங் கையாட்சி.

97. மூலந் தனத்தினுக்கு
முயற்சியென்பார் சிற்சிலபேர்
காலந் திரவியமாம்
கருத்துடையார் காட்சியிலே.

98. உடலம் பிணிநீங்கி
உள்ளமது நேற்றெளிவாய்த்
திடம்பெற் றிருப்பதுவே
சேரரிய பாக்கியமாம்.

99. அகலாது வாசனைதான்
அகிலமிதி லெல்லோர்க்கும்
சகவாசம் போனடக்கை
சத்தியந்தான் சத்தியந்தான்.

100. மாறுக்க லகமதை
மாற்றுவது நன்மௌனம்
ஆறாத் துயரமெல்லாம்
ஆற்றுவதோ வீசனருள்.

101. சத்தியமே நன்மார்க்கந்
தவறுவரு மற்றெதிலும்
வித்தையிதில் லாபமெத்த
விசுவாசம் மெத்தமெத்த.

102. பூட்டியிட்ட தேகமிது
போயழியு மெந்நாளும்
நாட்டிலுள்ள வாழ்வினுக்கு
நற்பெயரே கண்டபலன்.

103. வாலிபந்தா னானாலும்
மாசுமறு சம்மதியேன்
பாலியந்தா னானாலும்
பழிபழுது சம்மதியேன்.

104. சித்தம்மொழி தான்றிருந்திச்
செயல்திருந்தி நீநடப்பாய்
உத்தமியான் பெற்றெடுத்தேன்
ஒருகுறையுஞ் செய்யாதே.

105. உள்ளபல பூமியெல்லாம்
ஓர்குடைக்கீ ழாண்டாலும்
பிள்ளையை வளர்க்கும் வித்தை
பிரயாச மானவித்தை.

106. ஆராய்ந் துலகனைத்தும்
ஆண்டாலும் பிள்ளையொன்றை
நேராக்க மாளாது
நிச்சயந்தா னிச்சயந்தான்.

107. கண்ணே யுறங்குறங்கு
கற்பகமே நித்திரைபோ
மண்ணிலுள்ள யாபேரும்
வாழியென்று நித்திரைபோ.

108. பிள்ளையை வளர்ப்பதிலே
பேரறிவு பெற்றுநின்ற
தள்ளையெல்லாம் வாழியென்று
தண்ணமுதே நித்திரைபோ.

ஒத் தத் ஸத்.

தே. பாலசுப்பிரமணிய பிள்ளை.

The MADRAS MAIL of the 20th October says:—

THE "VIVEKA CHINTAMANI."

"This high-class Tamil periodical entered upon the twelfth year of its existence a few months ago, and it has done much good work during this period to deserve the support of the Indian community. Mr. C. V. Swaminatha Iyer, its editor, has, through his unaided exertions, brought the magazine to a high degree of literary merit. During the last year he has made religious philosophy a special feature of the journal and has contributed to its pages devotional writings particularly interesting to Hindu ladies. He is about to issue a collection of philosophic poems in easy Tamil, popularising the teachings of the Advaita school."

---

'ஹிந்து'ப் பத்திரிகை.

---

சென்னையில் பிரசுரமாகும் ஹிந்து என்னும் இங்கிலீஷ் தினவர்த்தமானப் பத்திரிகை யேற்பட்டு சென்ற செப்டெம்பர்௴ 20௳க்கு 25-வருஷங்களாயின. இப்படி 25 வருஷமாகி அப்பத்திரிகைக்கு 26-வது வயதுபிறந்த சுபதினத்தைக் கொண்டாட ஸெப்டம்பர் மாசம் 21-௳யன்று அப்பத்திரிகைக்குச் சொந்தக்காரரான ம-ா-ா-ஸ்ரீ மு. விராகவாசாரியார் அவர்கள் அப்பத்திரிகா நேசர்களையழைத்து பாட்டுக் கச்சேரிவைத்து உத்ஸவங் கொண்டாடினார். இப்பத்திரிகை 25-வருஷங்களுக்கு முன் ஏற்பட்டபொழுதுசென்னையில் சுதேசிகள் பொருட்டுநடத்தப்படும் சரியான இங்கிலீஷ் பத்திரிகை யில்லாமலிருந்தது. அக்குறையை நிறப்ப, யூனிவர்ஸிடி வித்யாபட்டம் பெற்றவாலிபர்களில் 6-பேர்கள் சேர்ந்து இப்பத்திரிகையை வாராந்தரம் பிரசுரிக்கத் தொடங்கினார்கள். இவர்களில் ம-ா-ா-ஸ்ரீ சுப்பிரமணிய ஐயரும், மு. வீரராகவாசாரியரும் மட்டும் இது விஷயத்தில் முற்றுமுடன்பட்டு வேறுவேலை யின்றித்தங்கள் காலத்தையும் கருத்தையும் இப்பத்திரிகை நடத்துவதிலே செலவிட்டு வருபவர்களாய் முயன்று வந்தமையால், அப்பத்திரிகை இவர்களிருவருக்கும் சொந்தமாயிற்று. ஜி, சுப்பிரமணிய ஐயர் பிரிந்துபோக நேரிட்டதின் மேல், மு. வீரராகவாசாரியார் ஒருவரே இப்பத்திரிகைக்குச் சொந்தக்காரராய்த்தங்கினார். "காலத்துக்கேற்ற கோலம்" என்றபடி, பிரிடிஷ் இராஜ்யம் இந்தியாவில் நிலைபெறவும், அவ்விராஜ்ய ஒழுங்கின் கீழ் பிரஜைகள் முன்னுக்கு வருவதற்கு இன்றியமையாச் சாதனமாகவுள்ள வழிகளில் பத்திரிகையொன்று என்பதை யுணர்ந்து, அவர்களுணர்ந்ததை உள்ளபடி யனுஷ்டித்து பிரத்தியக்ஷானுபவமாக விளங்கவைத்தவர்கள் இப்பத்திரிகை யோங்கிவளருவதற்கு ஆதிகாரணமாயிருந்த சுப்பிரமணிய ஐயரும், வீரராகவாசாரியருமேயாயினும், இது அவர்களாலேதான் முன்னுக்குவந்தது என்று சொல்லுவதுதகாது ஏனெனில், ஒரு ஜனசமூகத்தில் புதிய எண்ணங்களும் அபிப்பிராயங்களும் உதித்துவளர்ந்துவரத்தொடங்கினால், சீக்கிரத்தில் தானே அவ்வெண்ணங்களும் அபிப்பிராயங்களும் உருவெடுத்து விளங்கப் பார்க்கின்றன. இது ஓர் தத்துவ சாஸ்திரவுண்மை. இங்கிலீஷ்படித்த விவேகிகளின் எண்ணங்கள் உருவெடுக்குங்காலம் நேர்ந்தபொழுது, அவ்வெண்ணங்களே யுருவெடுத்தவதாரமாவதற் கிசைந்த பாத்திரங்களாக இவர்களிருவரும் நேர்ந்தார்கள். அப்படி நேர்ந்ததினாலே சற்பாத்திரர்களானார்கள். இவர்கள் இருவர் கூட்டுறவினால் எல்லாப்பொதுவிஷயங்களையும் ஒழுங்குபட நெறியறிந்து நடத்துங்கடன் இவர்களதே யாகவும், அதை நிர்வகிப்பதற்கு வேண்டிய சக்தி சமயோசிதசாமர்த்தியமும், படித்தவர்களாதரவும் ஹிந்துவுக்கு நன்றாக அமைந்திருந்தது ம-ா-ா-ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் விலகவும் இதற்குக் குறைவு வருமோவென்று சிலர் அஞ்சினதும் பொய்யாக அவருக்குப்பின் வந்தவரும் அவர் கீழிருந்து பழகினவருமான ம-ா-ா-ஸ்ரீ கருணாகரமேனன் இப்பத்திரிகையை அதன் திறங் குறையாது நன்கு நடாத்தி வந்தார், வருகிறார்; இன்னும் வெகுகாலத்துக்கு இப்படியே நடத்திவருவாரென்றுநம்புகிறோம். இதன் சொந்தக்காரராகிய ம-ா-ா-ஸ்ரீ மு. வீரராகவாசாரியரும் இப்பொழுதுள்ள கடனுடன் சால்ஜாப் சல்லியங்களெல்லாம் தீர்ந்து, பொதுஜனக்ஷேமத்துக்கும், பொதுப்பிரயோஜனத்துக்கும் காரணமாகவிருக்கும்படி ஹிந்துப்பத்திரிகையை அதன் பெருக்கும் கீர்த்திக்கும் குறைவுவாராது வெகு காலத்துக்கு நடத்திவருவாரென்று கோறுகிறோம்.

---

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியத்துக்குரிய சந்தாவைச்செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல்வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தா தொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

*20th May*, 1903. அ. ப. ஏஜன்ஸி.

## "ANANDA MISSION"

### For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self-Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

" Seek Truth wherever you can find it,"
" But Make your Choice and Stick to it "
till you reach the end.

"*Truth is hard Finding !*" **Yes,** "*Uncompromising too*" **when** *whole*; **Yet Try !** "*Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*

" And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state.

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all.

***Satyameva Jayati.***

## Hail! Ananda Natesa!

*Sri Akhandananda Satguruve Namaha.*

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.
Minimum Subscription Rs. 5 per annum.
Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.
**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—
**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**
**Single copy, current No. $5\frac{1}{2}$ As.; Back Nos. 6 As. Each.**
**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V P. P to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்'.

டி **தளமான காதப்கிபதிப்பு**:— அத்தியக்ஷர்கள், ரீங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணு. பழைய பிரதி 8 அணு.

**லேசான காகிதப்பதிப்பு**:—சர்தாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணு. பழைய பிரதி 6 அணு.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவருமல் கட்டினல் வருஷசந்தாவில் 8 அணுவும், 6-மாச சந்தாவில் 4 அணுவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினல் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.